Registered No. M. 2330 'SIDDHANTHAM
Vol. 32—No. 6



# சித்தாந்தம்

சைவ சித்தாந்த மகா சமாஜத் திங்கள் வெளியீடு

'தன்க டன்னடி யேனையுந் தாங்குதல்
என்க டன்பணி செய்து கிடப்பதே'

மலர் 32 | விகாரி ஆனி 1959 ஜூன் | இதழ் 6

| உள்ளுறை | | பக்கம் |
|---|---|---|


பத்திராசிரியர் : புலவர் - முருகவேள், எம்.ஓ.எல்.

உதவிப் பத்திராசிரியர் : மு. நாராயணசாமி

சைவ சித்தாந்த மகா சமாஜம்
14, வாரன் ரோடு, மயிலாப்பூர், சென்னை-4

ஆண்டுச் சந்தா ரூபா 3 தனிப்பிரதி அணா 4

## செய்திச் சுருக்கம்

சிவஞானசித்தியார் வகுப்பு:—நாகர்கோயில் நன்னெறி மன்றத்தின் சார்பில் 23–4–59 முதல் பாலகவி வயிரவநாதம் திரு. இராமநாதன் செட்டியார் அவர்களை ஆசிரியராகக் கொண்டு தொடங்கிய சித்தியார் வகுப்பு நாள்தோறும் முறையாக நடந்து வருகிறது. 50-க்கு மேற்பட்ட அறிஞர்கள் கலந்து பயன்பெறுகின்றனர்.

திருநாவுக்கரசு நாயனார் குருபூசை:—இக் குருபூசையை முன்னிட்டு நாகர்கோயில் நன்னெறி மன்றத்தின் 68-வது பிரார்த்தனைக் கூட்டம் 2–5–59 மாலை வடிவை திரு. R. இராமசாமிப் பிள்ளை இல்லத்தில் சிறப்புற நடைபெற்றது. சுசீந்திரம் துறைசை ஆதீனம் திருஞானசம்பந்த சுவாமிகள் தலைமை தாங்கினர். திருமுறை ஓதுதல், தியானம், பஜனை, நன்மொழி வழங்கல் ஆகிய நிகழ்ச்சிகள் வழக்கம்போல் சிறப்புற நடந்தேறின. வித்துவான் திரு. C. குமரேச பிள்ளை நாயனாரைக்குறித்து விரிவாக நல்லுரை வழங்கினர்.

வார வழிபாடு :—தஞ்சை ஜில்லா திருச்சிற்றம்பலம் ஸ்ரீ நடனபுரீசுவரர் ஆலயத்தில் 1950-ம் ஆண்டு தொடங்கி வெள்ளிக்கிழமை தோறும் வாரவழிபாடு தவறாது நடந்து வருகிறது. காந்தி வித்தியாலய மாணுக்கர், ஆசிரியர், பயிற்சிச்சாலை மாணுக்கர், ஆசிரியர், பெண்கள், சீர்திருத்தப் பள்ளி மாணுக்கர் ஆகியோர் பங்கு கொள்கிறார்கள். வழிபாட்டன்று காலையில் மாணுக்கர் ஆலயத்தின் பிராகாரம், சுற்றுப்புறம் முதலியவற்றில் துப்புரவும் உழவாரத் திருப்பணியும் செய்வது குறிப்பிடத்தக்கது.

மாத வழிபாடு :—தஞ்சை ஜில்லா பந்தணைநல்லூர் ஸ்ரீ பசுபதீசுவரர் ஆலயத்தில் நிர்வாக அதிகாரி ஸ்ரீ கோதண்டபாணி நாயுடு முயற்சியால், மார்கழி மாதம் தொடங்கி மாத வழிபாடு நடைபெறுகிறது. வழிபாடு பௌர்ணமி தினத்தன்று திருச்சிற்றம்பலம் காந்தி வித்தியாலய மாணுக்கர், ஆசிரியர் மாணுக்கர் 100 பேருக்குக் குறையாமல் கலந்து கொண்டு வழிபாட்டைச் சிறப்பிக்கிறார்கள். சிறப்பாக, சொற்பொழிவுகள் நடைபெறுவதுண்டு. இங்குள்ள தனிச்சிறப்பு ஸ்ரீ பசுபதீசுவரர் ஆலயமும் ஸ்ரீ ஆதிகேசவப் பெருமாள் ஆலயமும் சேர்ந்திருப்பது. மாணுக்கர் இரு ஆலயங்களிலும் வழிபாடு செய்கிறார்கள்.

Reg. M. 2330

உ
சிவமயம்

# சித்தாந்தம்

ஆனைமுகன் ஆறுமுகன் அம்பிகைபொன் னம்பலவன்
ஞானதரு வாணியைஉள் நாடு

மலர் 32 | விகாரி ஆனி 1959 ஜூன் | இதழ் 6

## " திருநின்ற செம்மை "*

(முருகவேள்)

" திருநின்ற செம்மை " என்பது திருநாவுக்கரசர் பெருமானின் சிறப்பைக் குறிப்பதற்கு எழுந்த ஓர் அடைமொழித் தொடர். " திருநின்ற செம்மையே செம்மையாக் கொண்ட திருநாவுக்கரசன்றன் அடியார்க்கும் அடியேன்" எனவரும் திருத்தொண்டத் தொகையுள், சுந்தரமூர்த்தி சுவாமிகளால் இவ்வடை மொழித் தொடர் வழங்கப் பெற்றுள்ளது.

அடைமொழிச் சிறப்பு

'அடைமொழிகளைச் சீர்தூக்கி ஆராய்ந்துபார்த்துத் தேர்ந்தெடுத்துத் திறந்தெரிந்து வழங்குதலிற்றான், ஒரு சிறந்த புலவனின் நுண்ணுணர்வு புலனாகும்' (The choice of adjectives is a fine test of a great poet's originality) என அறிஞர்கள் கூறுவர். இனிமை மிக்க பாடல்கள் இயற்றுதலில் வல்லவராகப் புலவர் பெருமக்களாற் புகழ்ந்து போற்றப்பெறும் " கபிலரது பாட்டு"களுள் ஒன்றாகிய குறிஞ்சிப்பாட்டின்கண், பல்வேறு மரஞ் செடி கொடிகளும் அவ்வவற்றிற் கேற்ற அடைமொழிகளால் திறந்தெரிந்து குறிப்பிட்டு விளக்கப்பட்

* சென்னை, தியாகராய நகர்த் தருமபுர ஆதீன சமயப் பிரசார நிலையத்தின்கண் நிகழ்ந்த " திருநாவுக்கரசர் திருநாள் " (2-5-59) விழாவில், சமாஜத் தலைவர் இராவ்சாகிப் திரு. நல். முருகேச முதலியார், B. A. அவர்கள் தலைமையிற் பேசியதனைத் தழுவியது.

டிருத்தல், கபிலரின் நுண்ணுணர்வைப் புலப்படுத்துதல் காணலாம். இவ்வுண்மையை அடிப்படையாகக் கொண்டு ஆராய்ந்து காணுங்கால், 'திருநின்ற செம்மை' என்னும் அடைமொழியானது, அதனை வழங்கிய சுந்தரமூர்த்திகளின் நுண்மாண் நுழை புலனையும், அதனைப் பெறுதற்குரியராகப் பிறங்கிய திருநாவுக்கரசரின் சிறப்பினையும் தெற்றென விளக்குவதாதல் தெளியப்படும்.

அடைமொழிகள் "தினையளவு போதாச் சிறு புல் நீர் நீண்ட பனையளவு காட்டும் படி"யனவாகும். திரு. வி. க. அவர்களின் சிறப்புகளை யெல்லாம் "தமிழ்த்தென்றல்" என்னும் ஒரு சிறிய அடைமொழித் தொடர் தன்னுள் அடக்கிக் காட்டி விடுகின்றது. காந்தியடிகளின் கடலனைய மாட்சிகளை யெல்லாம் தாகூர் 'மகாத்மா' என்னும் சிறிய அடைமொழியில் அடக்கிக் கூறி விளக்கிவிட்டார். அங்ஙனமே தன்னிகரற்ற கவிஞரேறாகிய தாகூரின் பெருமைகளை யெல்லாம் 'குருதேவ்' எனக் குறிப்பிட்டுக் காந்தியடிகள் சுருக்கமுற விளக்கினர். திருஞான சம்பந்தர் திருநாவுக்கரசர்பால் தாம் கொண்டிருந்த பேரன்பினையும் பெருமதிப்பினையு மெல்லாம் 'அப்பர்' (The Father of the Nation) என்னும் சிறு சொல்லாற் புலப்படுத்தி விட்டார். இச் சிறிய சொற்களில் எத்துணைக் கருத்துச் செறிவும் விரிவும் அமைந்து காணப்படுகின்றன! இவ்வாறு, விரிந்த பல பெருங் கருத்துக்களை மிகவும் சுருங்கிய சொற்களிற் செறித்து வைத்துத் திறம்பட விளக்குதல், மிக மேலான வித்தகர்கட் கல்லால் ஏனையோர்க்கு அரிதாகும். இத்தகைய வித்தகர் அமையச் சுந்தரமூர்த்தி சுவாமிகள் அருளிச்செய்த சிறந்ததொரு தொடரே 'திருநின்ற செம்மை' என்பது.

*வித்தகர்க்கல்லால் அரிது*

அடைமொழிகளை வழங்குதல் எத்துணைக் கடினமோ, அத்துணை யளவு அதன் பொருட் குறிப்பு நுட்பங்களை உணர்தலுங்கூட, மிகவும் கடினமானதே யாகும். 'கண்ணே மணியே' எனத் தாய் தன் குழவியைப் பாராட்டுங்கால், அச் சொற்கள் என்னென்ன பொருள்களை உணர்த்துகின்றன என்பதனை, அத்தாயே அறிந்துணர வல்லளன்றிப் பிறர் உணர்தல் இயலுமோ? அங்ஙனமே,

*உள்ளஞ் செய்தே உணரலாம்*

" மாசறு பொன்னே வலம்புரி முத்தே
காசறு விரையே கரும்பே தேனே
அரும்பெறற் பாவாய் ஆருயிர் மருந்தே
பெருங்குடி வாணிகன் பெருமட மகளே
மலையிடைப் பிறவா மணியே என்கோ
அலையிடைப் பிறவா அமிழ்தே என்கோ
யாழிடைப் பிறவா இசையே என்கோ
தாழ்இருங் கூந்தற் றையால் நின்னை "

எனக் கோவலன் கண்ணகியைப் பாராட்டிய புகழுரைகள், நம்மனோர்க்கு வெறுஞ் சொல்லாய்க் கழிவதன்றி, அவன் எய்தி யிருக்கற்பால உளநெகிழ்ச்சி உணர்ச்சித் திறங்களை யெல்லாம் நம் பக்கல் எய்துவிக்குங் கொல்லோ? இதுபற்றி யன்றே, ஆசிரியர் தொல்காப்பியர் தாமும் " உணர்ச்சி வாயில் உணர்வோர் வலித்தே " என அருளிச் செய்வாராயினர்! " பொருளது புரைவே புணர்ப்போன் குறிப்பின் மருளற வரூஉம் மரபிற் றென்ப " எனப் பேராசிரியர் சுட்டி யிருத்தலும் ஈண்டைக்கு உணரத்தகும். எனவே, " என்னம் மிக்கான் " எனச் சேக்கிழார் சுவாமிகள் சிறந்தெடுத்தோதும் சுந்தரமூர்த்தி சுவாமிகள், திருநாவுக்கரசரைப் பற்றித் ' திருநின்ற செம்மை ' என்னும் தொடர் மொழியாற் குறிப்பிட்டு எண்ணிய எண்ணங்களை யெல்லாம், இன்னவை என அவ்வாறே எண்ணி யறிதல் எத்துணையும் நமக்கு இயல்வதன்று. ஆயினும், அவற்றை இன்னவை யாகலாம் என உன்னம் (ஊகம்) செய்து ஓராற்றான் உணர இயன்ற அளவு முயலுதலில் இழுக்கொன்று மில்லை.

திருநாவுக்கரசரை நினைவார் எவர்க்கும் அவர்தம் சிவவேடப் பொலிவழகே மனக்கண் முன்னர் முதற்கண் தோன்றும். இடையறுப் பேரன்பும், மழைவாரும் இணை விழியும், உழவாரத் திண் படையறுத் திருக்கரமும், சிவபெருமான் திருவடிக்கே பதித்த நெஞ்சும், நடையறுப் பெருந்துறவும், ஞானப்பாடற் றொடையறுச் செவ்வாயும் உடைய திருநாவுக்கரசரின், சிவவேடப் பொலிவழகு எவர் நெஞ்சையும் பிணிக்கவல்லதாகும். திருநாவுக்

திருவேடத் தியல்பு

கரசரை நாம் நேரிற் கண்டறியோ மாயினும், சிவனடியார் களின் இயல்புகளையோ, அன்றிச் சிவ வேடத்தின் சிறப் பினையோ பற்றி நினைக்குங்கா லெல்லாம், திருநாவுக்கரச ரையே நாம் பெரிதும் நினைவு கூர்கின்றோம். ஆதல் பற்றியே, "இனிப் பத்தாது திருவேடத்தையும் சிவாலயத் தையும் பரமேசுரன் எனக் கண்டு வழிபடுக என்றது" என வரும் சிவஞானபோதப் பகுதியின்கண், சிவவேடத்தின் இயல்பினை விளக்குமிடத்து,

"தூயவெண் நீறு துதைந்தபொன் மேனியும் தாழ்வடமும்
நாயகன் சேவடி தைவருஞ் சிந்தையும் நைந்துருகிப்
பாய்வது போலன்பு நீர்பொழி கண்ணும் பதிகச்செஞ்சொல்
மேயசெவ் வாயும் உடையார் புகுந்தனர் வீதியுள்ளே"

"சிந்தை இடையறா அன்பும் திருமேனி தன்னில் அசைவும்
கந்தை மிகையாங் கருத்தும் கையுழ வாரப் படையும்
வந்திழி கண்ணீர் மழையும் வடிவிற் பொலிதிரு நீறும்
அந்தமி லாத்திரு வேடத் தரசும் எதிர்வந் தணைய"

"கண்ட கவுணியக் கன்றும் கருத்திற் பரவும்மெய்க் காதல்
தொண்டர் திருவேடம் நேரே தோன்றிய தென்று தொழுதே"

எனப் போதரும் பெரிய புராணச் செய்யுள்கள் மூன்றனை மேற்கோளாகக் காட்டியருளும் சிவஞான சுவாமிகள், அம் மூன்றனையும் திருநாவுக்கரசர் பெருமான் ஒருவரைப் பற்றி யனவாகவே அமைய எடுத்துக் காட்டியருளினர் போலும்! மேலும், "கருத்திற் பரவும் மெய்க்காதற்றொண்டர் திரு வேடம் நேரே தோன்றியது" எனத் திருஞான சம்பந்தர் தாமே, திருநாவுக்கரசரைத் தொழுதனர் எனச் சேக்கிழார் பெருமான் சிறந்தெடுத்துக் கூறியிருத்தலும் சிந்தித்தற் குரியது. இத்தகைய திருவேடத்தின் இயல்பினையே 'திருநின்ற செம்மை' எனச் சுந்தரமூர்த்திகள் வீதந்து வியந்து புகழ்ந்தனர் போலும்!

இனி, 'செம்மை' என்பதற்கு வேறு பொருள்களும் கொள்ளலாம். தமிழ்மொழியின் தனிப்பெருஞ் சிறப்பினை விளக்கலுறுவார் அனைவரும், உள்ளத்தின் தன்மை

'உண்மை', வாயின் தன்மை 'வாய்மை', மெய்யின் தன்மை 'மெய்ம்மை' எனத் தமிழின்கண் அமைந்துள்ள அரிய சொல்லமைப்பு முறையினையும், அதன் உயரிய குறிக்கோளையும் போற்றிப் புகழ்ந்துரைப்பர். இங்ஙனம் உண்மை - வாய்மை - மெய்ம்மை என அதனதன் இயல்பினைத் தனித்தனியே குறிப்பிடாது மூன்றனையும் ஒருங்கே சுட்டலுறின், அங்ஙனம் சுட்டுதற்கு அமைந்த சொல்லே 'செம்மை' என்பது எனலாம். "வனப்பாவது பெரும் பான்மையும் பல உறுப்பும் திரண்டவழிப் பெறுவதோர் அழகு" எனப் பேராசிரியர் விளக்கியிருத்தல் போல்வது இது!

மனமொழி மெய்கள் மாறுகாமை

" இற்பிறந்தார் கண்ணல்ல தில்லை இயல்பாகச்
செப்பமும் நாணும் ஒருங்கு "

என வரும் திருக்குறள் உரையின்கண் ஆசிரியர் பரிமேலழகர் "செம்மை : கருத்தும் சொல்லும் செயலும் தம்முள் மாறுகாமை" என விளக்கியிருத்தலும் ஈண்டு உளங்கொளத் தகும். எனவே, மனம் மொழி மெய் என்னும் முக்கருவிகளும் தம்முள் மாறுகாமல் திருநாவுக்கரசர்க்குச் சிவ வழிபாட்டில் உறைத்து நின்ற திறத்தினையே 'திருநின்ற செம்மை' எனச் சுந்தரர் வியந்து பாராட்டினர் என்றலும் அமையும்.

" மையற்றுறை ஏறி மகிழ்ந்தலர்சீர்
வாகீசர் மனத்தொடு வாய்மையுடன்
மெய்யுற்ற திருப்பணி செய்பவராய்
விரவுஞ் சிவசின்னம் விளங்கிடவே
எய்துற்ற தியானம் அருவுணர்வும்
ஈறின்றி எழுந்திரு வாசகமும்
கையிற்றிக ழும்உழ வாரமுடன்
கைக்கொண்டு கலந்து கசிந்தனரே "

எனச் சேக்கிழார் பெருமான், திருநாவுக்கரசர் சிவ சின்னங்கள் விளங்க, மனத்தின்கண் தியானம் அரு உணர்வும், வாயின்கண் ஈறின்றி எழும் திருவாசகமும், கையின்கண் உழவாரமும் கொண்டு, முக்கருவிகளும் தம்முள் மாறுகாமல்

ஒத்துநிற்கத் திருப்பணி செய்தமையினை, நிரல்நிறை அணி அமைய விளக்கி யிருத்தல் அறிந்தின்புறற்பாலது. மேலும், ஈண்டு ' மெய்யுற்ற திருப்பணி ' என்பது உண்மைத் தொண்டு எனவும், உடற்றொண்டு எனவும் இருபொருள்பட அமைந்த நயமும் போற்றத்தகும்.

இனி, 'செம்மை' என்பதற்கு ஒழுக்கம் எனவும், அறம் எனவும் குறிப்புப்பொருள் கொள்ளுதல் அமையும்.

ஒழுக்க விழுப்பம்

திருநாவுக்கரசர் சமண் சமயம் சேர்ந்திருந்தபோது, இந்நாளிலும் ஒரு சிலர் கூறி வருதல்போல, 'ஒழுக்கமே போதும். கடவுளுணர்ச்சி வேண்டா ' எனக் கருதியிருந்திருத்தல் கூடும். இறைவனால் ஆட்கொள்ளப் பெற்ற பிறகே, 'இறைவனுணர்ச்சி யில்லாத ஒழுக்கம் ஒரு சிறிதும் பயன் இல்லாதது' என்னும் உண்மையை அவர் உணர்ந்தாராகல் வேண்டும்.

" நானேதும் அறியாமே என்னுள் வந்து
நல்லனவும் தீயனவும் காட்டா நின்றாய் "

" புந்திவட்டத் திடைப் புக்கு நின்றானையும் பொய் என்பனோ"

"கள்ளனேன் கள்ளத்தொண்டாய்க் காலத்தைக் கழித்துப் போக்கித்
தெள்ளியே னாகி நின்று தேடினேன் நாடிக் கண்டேன்
உள்குவார் உள்கிற் றெல்லாம் உடனிருந் தறிதி என்று
வெள்கினேன் வெள்கி நானும் விலாவிறச் சிரித்திட் டேனே "

என்பன போன்று வரும் அவர்தம் திருமொழிகளால் இவ்வுண்மை புலனாகும். இறைவ னுணர்ச்சியின்றி வெறும் ஒழுக்கம் மட்டுமே அமையுமெனின், இயற்கை நெறி சிறிதும் பிறழாது தத்தமக்கு அமைந்த வகையில் அன்று தொட்டு இன்றளவும் தவறாது நடந்து வரும் விலங்குகள் தாமே விழுப்பம் உடையனவாகக் கருதப்பெறுதல் வேண்டுமாதலின், இறைவ னுணர்ச்சியோடு கூடிய ஒழுக்கமே ஒழுக்கம் (திருநின்ற செம்மையே செம்மை) ஆகும் எனத் திருநாவுக்கரசர் பெருமான் தெளிந்துணர்ந்து வாழ்ந்து காட்டிய சிறப்புப் பற்றிச் சுந்தரமூர்த்திகள் " திருநின்ற செம்மையே செம்மையாக் கொண்ட திருநாவுக்கரசர் "

எனப் போற்றியுரைப்பாராயினர் எனக் கொள்ளுதலும் பொருந்தும் எனலாம்.

இங்ஙனமே, திருநாவுக்கரசர் தமது இளமையில் "தயா மூல தன்மம் " என்னும் சமணர் கொள்கையைத் தழுவி,

அறத் திறம்

' ஒருவன் நற்செயல்களை - கடமைகளை - அறங்களைச் செய்தாலே போதும், கடவுளுணர்ச்சியும் வழிபாடும் உடையனாதல் வேண்டுவதில்லை' என்னும் கொள்கையுடையராக ஒழுகி வந்தனர் போலும்! திருநாவுக்கரசர் தமது இளமைக் காலத்திலேயே,

" காவளர்த்தும் குளந்தொட்டும் கடப்பாடு வழுவாமல்
மேவினர்க்கு வேண்டுவன மகிழ்ந்தளித்தும் விருந்தளித்தும்
நாவலர்க்கு வளம்பெருக நல்கியும்நா னிலத்துள்ளோர்
யாவருக்கும் தவிராத ஈகைவினைத் துறைநின்றார்."

ஆயினும், அவ்வறச் செயல்கள் இறையுணர்ச்சியோடு கூடிய உயரிய நோக்கிலவாய் நிகழ்ந்தன என்பது,

"நேரநெறி, நிலையாமை கண்டறங்கள் செய்வாராய்
ஆசிலறச் சாலைகளும் தண்ணீர்ப்பந் தரும்அமைப்பார் "

எனச் சேக்கிழார் சுவாமிகள் கூறுதலாற் பெறப்படும். இறைவனால் ஆட்கொள்ளப் பெற்ற பிறகே, பசுபுண்ணியம் பதிபுண்ணியங்களுக்குள்ள இடையீடும், " அரன் அடிக்கு அன்பு செய்கை மாண்பறம். அரன்றன் பாதம் மறந்து செய் அறங்கள் எல்லாம் வீண்செயல் " " அரனடிக்கு அன்பர் செய்யும் பாவமும் அறமதாகும் பரனடிக் கன்பிலாதார் புண்ணியம் பாவமாகும் " என்பன போன்ற உண்மைகளும் திருநாவுக்கரசர்க்கு விளங்கினவாதல் வேண்டும்! ஆட்கொள்ளப் பெறுநிலையில் ' இரப்பவர்க்கு நான் ஈகின்றேன் ' என்னும் தன் முனைப்பு அவர்பால் நிகழ்ந்திருக்கும். ஆட்கொள்ளப் பெற்ற நிலையில் " யான் செய்தேன் பிறர் செய்தார் என்னது யான் என்னும் இக் கோணைஞான எரியால் வெதுப்பி நிமிர்த்துத்தான் செவ்வே நின்றிருப்பார்." எனவே, அப்போது அவர்க்கு இறைவனே என்னை "இரப்பவர்க்கு ஈய வைத்தார்" என்ற அருளுணர்வு

மேலோங்கி நின்றது. "அல்லார் கண்டத்து அண்டர் பிரான் அருளாற் பெற்ற படிக்காசு பல்லா றியன்ற வளம் பெருகப் பரமன் அடியார் ஆனார்கள் எல்லாம் எய்தி உண்க" என்புழி, முன்போலன்றி அவர்க்கு அருளுணர்வே மேம்பட்டு முனைத்து விளங்கி நின்றமை காண்க. இந்நிலையின் சிறப்பை வியந்து பாராட்டுதற் பொருட்டும் 'திரு நின்ற செம்மை'த் திருநாவுக்கரசர் எனச் சுந்தரமூர்த்திகள் அருளிச் செய்தன ராதல் கூடும். இவையே யன்றி,

"மெய்ம்மையாம் உழவைச் செய்து விருப்பெனும் வித்தை வித்திப்
பொய்ம்மையாம் களையை வாங்கிப் பொறையெனும் நீரைப் பாய்ச்சித்
தம்மையுள் நோக்கிக் கண்டு தகவெனும் வேலி யிட்டுச்
செம்மையுள் நிற்ப ராகிற் சிவகதி விளையும் அன்றே"

என்றாற்போல வரும் திருநாவுக்கரசர் திருமொழிகள் பிறவும், ஈண்டு இயைபுபடுத்து எண்ணி யுணர்தற் குரியன.

இன்னோரன்ன உன்னங் (யூகங்)கள் ஒருபுறம் இருப்ப, உண்மையான் நோக்கலுறுவார்க்கு உணரத்தகுவது ஒன்றுளது. சுந்தரமூர்த்தி சுவாமிகள் கல்வி கேள்விகளில் வல்லவர். தொல்காப்பியம் திருக்குறள் சங்க இலக்கியங்கள் என்பவற்றை அவர் நன்கினிது கற்றுணர்ந்திருந்தார் என நாம் துணிதற்குச் சான்றுகள் பல உள்ளன. இறைவனைக் "கற்ற கல்வியினும் இனியான்" என அவர் குறிப்பிடுதலும், "அளவில் தொல்கலைகள் ஆய்ந்து திருமலி சிறப்பின் ஓங்கித் திருமணப் பருவம் சேர்ந்தார்" எனச் சேக்கிழார் பெருமான் அவரைக் குறித்துப் பாடியிருத்தலும் பிறவும், இவ் வுண்மையைச் செவ்விதின் வலியுறுத்தும். மேலும், எத்துணைப் பெரியவர்களின் வாழ்க்கையும் அவர்கட்கு முன்னர் இருந்த பெரியவர்களின் வாழ்க்கையால் உந்தப்பெற்று - உருப்பெற்று - உயர்வடைந்தொளிரும். ஞானியார் சுவாமிகளின் வாழ்க்கையால் தம்முடைய வாழ்க்கை வளம்படப் பெற்றோர் மிகப் பலராவர். அத்தகைய ஞானியார் சுவாமிகளின் வாழ்க்கையும் வளம்பெற உதவினோர் அவர்க்கு வழிகாட்டிகளாய் முன்னிருந்த எத்துணையோ பல பெரியோர்கள் ஆதல் கூடும். காந்தியடிகள் இஞ்ஞான்று உலகப்புகழ் பெற்று ஒளிரும் சான்

அழுந்திய பயிற்சி

ருரேயினும், அவர் அந் நிலையை அடைதற்குரிய முறையில், அவர்தம் வாழ்க்கையைச் செம்மையுற மாற்றித் திருத்தி யமைத்துத் தத்தம் நூல்களால் வழிகாட்டிகளாய் உதவினோர் ஒரு ரஷ்யரும் (Tolstoy - The Kingdom of God is within you), ஓர் ஆங்கிலேயரும் (Ruskin-Unto This Last), ஓர் அமெரிக்கரும் (Thoreau - Civil Disobedience) பிறரும் ஆவர் எனக் காந்தியடிகளே உடன் பட்டுக் கட்டுரைத்தலைக் காண்கின்றோம். மேலும்,

" பொன்னும் துகிரும் முத்தும் மன்னிய
மாமலை பயந்த காமரு மணியும்
இடைபடச் சேய வாயினும், தொடைபுணர்ந்து
அருவிலை நன்கலம் அமைக்குங் காலை
ஒருவழித் தோன்றியாங்கு, என்றும்
சான்றோர் சான்றோர் பாலர் ஆப !"

எனப் புறநானூறு பாடுவதும் பொருள் பொதிந்த மொழியே யன்றோ? இக் கருத்தினை அடிப்படையாகக் கொண்டு ஆராய்ந்து காணுங்கால், நம் சுந்தரமூர்த்தி சுவாமிகளுக்கும் அவருக்கு முற்பட்ட பல பெருஞ் சான்றோர்களும், அவர்கள் அருளிச்செய்த நூல்களும் வழிகாட்டிகளாய் உதவியிருத்தல் கூடும் எனக் கருதுதல் தவறாகாது. ஈண்டைக்குச் சிறப்பாக, சுந்தரர் திருநாவுக்கரசரைத் தமது வாழ்க்கைக்கு வழிகாட்டியாகக்கொண்டு, அவர்தம் திருப் பதிகங்களை அழுந்திக் கற்றறிந்து உணர்ந்தொழுகி வந்தார் எனத் துணிந்து கூறலாம். " ஞானத்தால் தொழுவார்கள் தொழக் கண்டு ஞானத்தாய் உனை நானும் தொழுவனே " என்றதனை ஒட்டித் " தொண்டாடித் தொழுவார்கள் தொழக்கண்டு தொழுதேன் என் வினைபோக " எனவும், " பெரும்பற்றப் புலியூரானைப் பேசாத நாளெல்லாம் பிறவா நாளே " என்றதனைத் தழுவி " ஓவுநாள் உணர்வொழியு நாள் உயிர்போகுநாள் உயர்பாடைமேற் காவுநாள் என்றிவையலாற் கருதேன் " எனவும் பிறவாறும், பலவிடங்களில் திருநாவுக்கரசரின் சொற்பொருட் குறிப்புக்கள் அமையச் சுந்தரமூர்த்தி சுவாமிகள் பாடியிருத்தல் இக் கருத்திற்கு அரண் செய்யும். இன்னோரன்னவற்றையெல்லாம் 'எரல் எழுத்துப் போல்வதோர் விழுக்காடு' எனக் கொண்டு புறக்கணித்தல் பொருந்தாது. " இணைகொள்

எழுநூறு இரும்பனுவல் ஈன்றவன் திருநாவினுக்கரையன்'' என்றதும், திருநாவுக்கரசர் திருப்பதிகங்களிற் சுந்தரமூர்த்திகள் பெற்றிருந்த அழுந்திய பயிற்சி இனைய தென அறிய அரிய சான்று பகரும். இத்தகைய சிறந்த பெரும் பயிற்சியின் விளைவாக எழுந்ததே 'திருநின்ற செம்மை' என்னும் செழும் பொருட்டொடர்.

சிவன்எனும் ஓசை

சைவசமய ஆசிரியர்களின் காலத்திற்கு முன்னரே இத் தென்றமிழ் நாட்டிற் சிவ வழிபாடு இனிது நிகழ்ந்து போந்ததாயினும், 'சிவம்' 'சைவம்' என்னும் சொற்கள் பண்டைச் சங்க நூல்களில் யாண்டும் பயின்று வரக் காண்கின்றிலம். 'பிறவா யாக்கைப் பெரியோன்' 'நுதல்விழி நாட்டத் திறையோன்' 'மழுவாள் நெடியோன்' 'ஆலமர் செல்வன்' என்றாற்போலவே பண்டைச் சங்க நூல்களிற் சிவ பெருமானைப் பற்றிய குறிப்புக்கள் காணப்படுகின்றன. மாணிக்கவாசகர் முதலிய நம் சமயாசிரியர்களின் நூல்களில் தான் 'சிவம்' என்னும் சொல் பெரிதும் பயின்று காணத் தலைப்படுகின்றது. எல்லாம் வல்ல இறைவனைக் குறித்தற்கு வேறு பிற சொற்களைக் காட்டிலும் 'சிவம்' என்னும் செந்தமிழ்ச் சொல்லே சிறப்புடையதெனத் தெளிந்து துணிந்து, நம் சமயாசிரியன்மார்கள் பெரிதும் போற்றி வழங்கத் தலைப்பட்டனர். இறைவன் - இயவுள் - கந்தழி - கடவுள் - முனைவன் முதலிய சொற்களைப் போல முழுமுதற் பெரும் பொருளின் ஒவ்வொரு வகை இயல்பினையே குறிப்பதாகாமல், அதன் எல்லாவகை இயல்புகளையும் ஒருங்கினிது குறிக்கும் பெருஞ்சிறப்புடைய சொல்லாக, நம் சமயச் சான்றோர்களால் 'சிவம்' என்னும்' செஞ்சொல் செவ்விதிற் றேர்ந்து அமைத்துக் கொள்ளப் பெற்றது போலும்! அதுபற்றியே,

"சிவன் எனும் நாமம் தனக்கே யுடைய செம்மேனி அம்மான்"

எனவரும் திருநாவுக்கரசர் திருமொழியும் எழுந்தது.

"மன்னுசிவன் சந்நிதியில் மற்றுலகம் சேட்டித்த(து)
என்னும் மறையின் இயல்மறந்தாய்—சொன்னசிவன்
கண்ணு உளம்வினையாற் கண்டறிந்து நிற்குங்காண்
எண்ணான் சிவன்அசத்தை இன்று"

எனவரும் சிவஞானபோத வெண்பாவின்கண், ஆசிரியர்

மெய்கண்டார் 'சிவன்' என்னும் சிரிய சொல்லைப் பேரின்பகாரணன் – முற்றுணர்வினன் – தூய தன்மையன் என்னும் வெவ்வேறு பொருள்கள் அமையுமாறு வழங்கியிருத்தல் ஈண்டுக் கருதியுணர்ந்து இன்புறற்பாலது. இவ்வாற்றால் 'சிவம்' என்னும் செஞ்சொல் இறைமைக் குணங்களை யெல்லாம் ஒருங்கினிது குறிக்கும் பெருஞ்சிறப்புடையதாதல் பெறப்படும். இத்தகு பெருஞ்சிறப்பினை முதன்முதல்

" சிவன்எனும் ஓசை யல்லது அறையோ
உலகில் திருநின்ற செம்மை யுளதே ?"

என அறைகூவி வினவி, யாவருக்கும் ஆணித்தரமாக அறிவுறுத்தருளியவர் திருநாவுக்கரசரே யாவர். இவ் வுண்மையுணர்ந்து வியந்துவந்தே "திருநின்ற செம்மையே செம்மையாக் கொண்ட திருநாவுக்கரசர்" எனச் சுந்தரமூர்த்தி சுவாமிகள் துதித்தருள்வாராயினர் எனக்கொள்ளுதல், சிவநெறிச் செல்வர் அனைவரும் ஒருசேர ஒப்பமுடிந்த உண்மையாகும்.

" வெறியார் பொழிற்சண் பையர்வேந்தர் மெய்ப்பா சுரத்தைக்
குறியே றியஎல்லை அறிந்து கும்பிட்டேன் அல்லேன்
சிறியேன் அறிவுக்கு அவர்தம் திருப்பாதம் தந்த
நெறியே சிறிதியான் அறிநீர்மை கும்பிட்டேன் அன்பால்."

---

## ஞானியார் அடிகளின் பேச்சாற்றல்*

(திரு. ம. பொ. சிவஞானம் அவர்கள்)

"பேச்சுத்திறன் பெறவேண்டும் என்ற அவாவை என் அகத்தே எழுப்பியவர், பொய்புடல் நீத்துப் புலவரெலாம் போற்றும் புகழுடலைப் பெற்றுவிட்ட திருப்பாதிரிப் புலியூர் ஞானியாரடிகள் ஆவார். நான் அச்சுத் தொழிலாளியாக இருந்தகாலத்தில், பகல் நேரத்தில் தொழிற்சாலையில் உடல்தேய - முதலாளித்துவக் கொடுமையால் - உயிர்தேய உழைத்த பின்னரும் உணர்ச்சி குன்றாமல், சமயம் நேர்ந்த போதெல்லாம் அடிகளாரின் சொற்பொழிவுகளைத் தவறாது

---

*" வானொலியில் ம. பொ. சி." என்னும் நூலினின்று எடுக்கப் பெற்றது.

கேட்டுவந்தேன். சொல்இனிமை, கருத்தழகு, கம்பீரமான குரல் ஆகியவை ஞானியார் அடிகளின் பேச்சுக்கிருந்த தனிச்சிறப்புகள். பகலெல்லாம் உழைக்கும் எனக்கு மாலை நேரத்தில் அவரது சொற்பொழிவு அலுப்பைத் தீர்க்கும் அமுதமாக இருந்ததோடு, தமிழ் ஆர்வத்தையும் வளர்த்தது. அது முதல் தமிழ் இலக்கியச் சொற்பொழிவுகள் எங்கு நடந்தாலும், யார் நிகழ்த்தினாலும் ஆர்வத்துடன் சென்று கேட்டு வந்தேன். இந்த ஆர்வம்தான் எனது பேச்சுத் திறமை வளர்வதற்குப் பெருங்காரணமாய் இருந்தது. என்னைத் தாய்மொழியின்பாற் பற்றுக்கொண்டு நாவன்மையை நாடச்செய்தது ஞானியார் அடிகளின் பேச்சாற்றல்."

---

# புகலூர் மேவிய புண்ணியன்

[G. கலியாணம், M. A., D.Econ.,]

தேவாரப்பாடல் பெற்ற பதிகளில் மூவரும் பாடிய தலம் மிகப்பெருமையுடையது. அத்தகைய சிறப்புடையது திருப்புகலூர் என்பது. அது தஞ்சை மாவட்டத்திலுள்ள நன்னிலம் இரயில் நிலையத்திலிருந்து கிழக்கே சுமார் நான்கு கல் தொலைவிலுள்ளது. முடிகொண்டான் ஆற்றின் வடகரையில் அமைந்திருக்கிறது. திருக்கோயில் ஊர் நடுவே இருக்கிறது. 90 அடி உயரமுள்ள ஐந்து நிலைக்கோபுரம் கோயில் வாயிலை அழகு செய்கிறது. இரண்டு பிராகாரங்கள் உள்ளன. வெளிமதிலின் புறத்தே தோட்டமிருக்கிறது. அதைச் சுற்றி நீர் நிறைந்த அகழி சூழ்ந்திருக்கிறது. கோயிலுக்குப் போகமாட்டும் வழியுள்ளது.

தேவாரம், பெரிய புராணம், கல்வெட்டுக்கள் முதலியவற்றில் இத்தலத்தின் பெயர் திருப்புகலூர் என்று காணப்படுகிறது. புன்னாகவனம், சரண்யபுரம், சரண்யபுரி, இரக்தாரண்யம் என்ற வேறு பெயர்களும் இப்பதிக்கு உள்ளன. கோயிலின் உள்ளே இரண்டு மூலத்தானங்கள் உள்ளன. ஒன்று அக்கினீசுவரர்; மற்றொன்று வர்த்தமானீசுவரர். சுயம்புமூர்த்தியான இறைவனுக்கு, புகலூர்

நாதர், புன்னாகநாதர், அக்கினிபுரீசுவரர், கோணப்பிரான் என்ற பெயர்களும், இறைவிக்கு கருந்தாழ்குழலி, கருந் தார்க்குழலி, சூளிகாம்பாள் என்ற பெயர்களும் அமைந் துள்ளன. மற்றொரு மூலத்தானத்தில் எழுந்தருளியுள்ள பெருமானுக்கு வர்த்தமானீசுவரர் என்றும், தேவிக்கு மனோன்மணி என்றும் பெயர்கள் வழங்குகின்றன. வர்த்தமானீச்சரத்திற்குத் தனியே திருஞானசம்பந்தர் ஒரு பதிகம் அருளியுள்ளார். கோணப்பிரான், கருந்தாழ்குழலி என்ற பெயர்கள் தேவாரத்திலும், திருப்புகலூர் மகாதேவர், கைலாயமுடைய நாயனார், கோணற் பெருமாள் என்ற பெயர்கள் கல்வெட்டுக்களிலும் காணப் படுகின்றன. இங்கு, சந்திர சேகரர் சந்நிதி மிகவும் சிறப்புடையது. கோயிலின் உட்பிராகாரத்தில் பூதேசுவரர், பவிஷ்யேசுவரர், அப்பர், வாதாபி கணபதி முதலியோரின் திருவுருவங்கள் இருக்கின்றன. வடக்கு வெளிப்பிராகாரத் தில் அம்பிகை கோயில் கொண்டெழுந்தருளியுள்ளாள். கோயிலைச் சுற்றியுள்ள திருக்குளத்தின் தென்மேற்குக் கரையில் சித்தர் கோயில் ஒன்றிருக்கிறது. பூம்புகலூர் மேவிய புண்ணியனைப் பதினெண் சித்தர்களும் வழிபட்ட தாகச் சொல்லப்படுகிறது. தெற்கு மடவிளாகத்தில் நெற் குன்ற வாணர் என்பார் வழிபட்ட ஞானவிநாயகர் ஆலயம் இருக்கிறது.

கோயிலைச் சுற்றியுள்ள திருக்குளத்தை அக்கினி தீர்த்தம், பாண தீர்த்தம் என்பர். 'தீர்த்தமே திகழும் பொய்கைத் திருப்புகலூர்' என்று அப்பரடிகளும், 'பொங்குதண் புனல்சூழ்ந்து போதணி பொழிற் புகலூர்' என்று ஞானசம்பந்தப் பெருந்தகையும், 'பூவிற் பொலி பொய்கை சூழ்புகலூர்' என்று சேக்கிழார் சுவாமி களும் போற்றியிருக்கின்றனர். இத்தல விருட்சம் புன்னை மரம். தேவாரத்தில் 'புன்னைப்பொழிற் புகலூர்' என்றும், பெரிய புராணத்தில் 'புன்னை மணங்கமழும் பூம்புகலூர்' என்றும் கூறப்பட்டிருக்கிறது.

முருகநாயனார் இப்பதியில் அவதரித்து இறைவனுக்குப் பூத்தொண்டு புரிந்ததும், அவர் மடத்திற்குச் சம்பந்தர், சிறுத்தொண்டர், அப்பர், திருநீலநக்கர் முதலியோர் எழுந் தருளி உடனுறைந்ததும், அப்பமூர்த்திகள் இங்குப் பல

காலம் தங்கி, உழவாரத்தொண்டு புரிந்து, அற்புதங்கள் நிகழ்த்தி, பதிகங்கள் பாடி இறைவன் திருவடிப் பேறெய்தியதும், சுந்தரருக்காக இறைவன் செங்கற்களைப் பொன் கற்களாக அருள் செய்ததும் ஆன நிகழ்ச்சிகள் இப்பதிக்கு மிக்க சிறப்புச் செய்கின்றன.

திருநாவுக்கரசர் தம் வாழ்நாட்களில் கடைசியாக இங்கே தங்கி உழவாரத்திருத்தொண்டு புரிந்தார். பொன்னும் மணியும் நிறைந்து காணும்படி இறைவன் திருவருள் செய்தார். ஓடும் பொன்னும் ஒக்கநோக்கும் நிலையில் நின்று அப்பர் அவைகளைப் பருக்கைக் கற்களுடன் வாரிப் பொய்கையில் எறிந்தார். தெய்வமகளிர் அவர் முன்தோன்றி மையல் விளைக்கமுயன்றனர். அத்தனார் திருவடிக்கீழ் நினைவகலா அன்புருகும் அவர் தம் சித்தநிலை திரியாது செய்பணியின் தலைநின்றார். அரம்பையரும் அகன்றுபோயினர். தாண்டகம், திருநேரிசை, ஆருயிர் விருத்தம், தசபுராணம், பாவநாசப்பதிகம் முதலிய பதிகங்களைப் பாடியருளினர். ஒரு சித்திரைத்திங்கள் சதய நன்னாளிலே ' எண்ணுகேன் என்சொல்லி எண்ணுகேனே ' என்று தொடங்கும் திருத்தாண்டகம் முதலாகப் பத்து பாடல்களிலும் ' உன்னடிக்கே போதுகின்றேன் பூம்புகலூர் மேவிய புண்ணியனே ' என்று பாடி, ' நண்ணரிய சிவானந்த ஞானவடிவேயாகி அண்ணலார் சேவடிக்கீழ் ஆண்ட அரசு அமர்ந்திருந்தார்.'

முருகநாயனார் இத்தலத்தில் அவதரித்த அந்தணப் பெரியார். இறைவனுக்குப் பூத்தொண்டு புரிந்து முத்திப் பேறடைந்தார். ' தொண்டர் தண்கயம் மூழ்கித்துணையலுஞ் சாந்தமும் புகையும் கொண்டு கொண்டு அடிபரவிக் குறிப்பறி முருகன் செய்கோலம் ' என்றும், ' மூசுவண்டறை கொன்றை முருகன் முப்போதுஞ் செய் முடிமேல் வாசமாமலருடையார் வர்த்தமானீச்சரத்தாரே ' என்றும் சம்பந்தர் இவர் தொண்டைப்புகழ்ந்துள்ளார். வர்த்தமானீசுவரர் சந்நிதியில் முருகநாயனார் திருவுருவம் இருக்கின்றது.

திருவாரூரில் பங்குனி உத்திரத்திருநாளில் பரவையார்க்குப் பொன் கொடுக்க எண்ணிய சுந்தரர், இத்தலத்திற்கு வந்து செங்கற்களைத் தலையணையாக வைத்து உறங்

கினர். விழித்தெழுந்தவுடன் அவை பொன்கற்களாகக் கண்டார். இறைவன் திருவருளை வியந்து ‘தம்மையே புகழ்ந்து இச்சை பேசினும்’ என்று தொடங்கும் திருப் பதிகம் பாடினார். ஒவ்வொரு பாடலிலும் ‘புகலூர் பாடு மின் புலவீர்காள்’ என்று கூறுகிறார். முல்லைக்குத் தேர் கொடுத்த பாரி வள்ளலை, ‘கொடுக்கிலாதானைப் பாரியே என்று கூறினும் கொடுப்பாரிலை’ என்று குறித்திருக்கிறார்.

தொண்டை நாடு சில காலம் சோழ மன்னர் ஆட்சிக் குட்பட்டிருந்தது. அந்நாட்டின் ஜயங்கொண்ட சோழ மண்டலத்தில் புலியூர்க்கோட்டத்துள் நெற்குன்றம் என்னும் ஊரில் பெருநிலக்கிழார் ஒருவர் இருந்தார்; நெற் குன்றவாணர் என்னும் பெயருடையார்; திருப்புகலூர்த் தலத்தில் மிக்க ஈடுபாடுடையவர். பஞ்சத்தின் காரணத் தால் அரசனுக்குரிய வரியைச் செலுத்த முடியவில்லை. அரசிறை கொடுக்காமையால் சிறை செய்ய அரச ஆணை பிறந்தது. திருப்புகலூரைத் தஞ்சமென்றடைந்திருந்த நெற்குன்றங்கிழாரை அரச ஏவலர் அங்குச் சென்று கண்டு மன்னன் ஆணையை அறிவித்தனர். திருப்புகலூரீசனை வழி பட்டுவிட்டுப் பின் அவர்களுடன் வருவதாகத் தெரிவித் தார். திருக்குளத்தில் நீராடி ஞானவிநாயகர் ஆலயம் சென்று முதலில் தொழுதனர். அவரையும் அறியாமல் கீழ்க்காணும் பாடல் அவர் உள்ளத்தெழுந்தது:—

உரைசெய் மறைக்கும் தலைதெரி யாவொரு கொம்பையென்றே
பரசு மவர்க்குப் பெருகிழ லாக்கும் பழனமெல்லாம்
திரைசெய் கடற்றுறைச் சங்கமு லாவுந் திருப்புகலூர்
அரசி னிடத்து மகிழ்வஞ்சி யீன்றவோர் அத்திநின்றே

“இச்செய்யுளை ஒரு அந்தாதிக்குக் காப்புச் செய் யுளாக்கலாமே” என்று அவர் பின்புறமிருந்து ஒரு குரல் எழுந்தது. அப்படிச் சொன்னவர் சிவபக்திமிகுந்த அவ்வூரி லிருந்த ஒரு கணிகைமாது. திரும்பிப் பார்த்த நெற்குன்ற வாணர் “அந்தாதிக்குக் காப்பாக்கினால் அரசிறைக்குப் பொருளாகுமா” என்று கூறினார். அதன் பொருளைத் தெரிந்து கொள்ளமுடியாத அவ்வம்மையாருக்கு அரச ஏவலர் விளக்கம் கூறினர். அதைக் கேட்ட அப்பெண்மணி தானே அரசிறைக்கு வேண்டிய தொகை அவ்வளவையும்

கொடுத்து அவரை மீட்டார். நெற்குன்றவாணரும் தாம் பாடிய செய்யுளைக்காப்பாகக் கொண்டு 'திருப்புகலூ ரந்தாதி' என்ற அரிய நூலை இயற்றினர். சிறந்த அந்தாதி களில் ஒன்ருக அஃது இன்றும் போற்றப்படுகிறது.

திருப்புகலூரைப் பற்றித் தேவாரத்தில் கூறப்பட்டிருப் பதுடன் பதினோராந்திருமுறையில் பரணதேவ நாயனரின் சிவபெருமான் திருவந்தாதியிலும், பட்டினத்துப் பிள்ளை யாரின் திருவேகம்பமுடையார் திருவந்தாதியிலும், நம்பி யாண்டார் நம்பிகளாலும், பெரியபுராணத்திலும் சிறப் பாகப் பேசப்பட்டிருக்கின்றது. சரண்யபுர மஹாத்மியம் என்ற வடமொழி நூல் எட்டுப்பிரதியாக உள்ளது.

இத்திருக்கோயிலில் பல கல்வெட்டுக்கள் இருக் கின்றன. முதல் இராஜராஜன், முதல் இராஜேந்திரன், முதல் இராஜேந்திரன், முதல் குலோத்துங்கன், மூன்ரும் குலோத்துங்கன் முதலியவர்கள் காலத்தவை. அவைகளில் பல அரிய செய்திகள் காணப்படுகின்றன. 'திருப்பொய் கைக் கரை சூழ்ந்த' என்ற குறிப்பு வருவதால் அகழி கோயிலைச் சுற்றியிருப்பதைச் சொல்லப்பட்டிருக்கிறது. சிவலிங்கமூர்த்திக்குக் கோணப்பெருமான் என்ற பெயர் உண்மையைத் தெரிவிக்கின்றன. மூலமூர்த்தி சிறிது வட புறமாகச் சாய்ந்திருப்பதை இன்றும் காணலாம். 'தொல்லை நீர்ப்புகலூர்க் கோணப்பிரானைக்குறுகக் குறுகா கொடுவினையே' என்று அப்பரடிகள் அருளியிருக்கிருர். இக்கோயிலிலுள்ள விநாயகருக்கு வாதாபி கணபதி என்ற பெயர் கல்வெட்டில் காணப்படுகிறது. அப்பமூர்த்திக்கு நித்திய பூசைக்காக நிபந்தம் ஏற்பட்ட செய்தியை முதல் இராஜராஜன் (கி. பி. 985—1012) காலத்திய கல்வெட்டு ஒன்று அறிவிக்கிறது. 'குளிச்செழுந்த நாயனர்' என்று அப்பர் குறிப்பிடப்படுகிருர். யாழ்மூரி நாயனர்', 'நக்க நாயனர்' என்று திருநீலகண்ட யாழ்ப்பாணர், திருநீல நக்கர் இவர்கள் குறிப்பிடப்படுகின்றனர்.

நம்பி முருகன் திருமடம் என்று முருக நாயனர் மடம் ஒன்று இருந்ததாகத் தெரிகிறது. பெரியபுராணத்தில் அப்பர் சுவாமிகள் ஒருவருக்கு மாத்திரம் தான் திருநட் சத்திரம் குறிக்கப்பட்டுள்ளது. திருநாவுக்கரசருக்குச் சித்திரைச் சதயத்தை யொட்டிப் பத்து நாட்கள் விழாவும்,

வைகாசி மாதத்தில் பத்து நாட்கள் விழாவும் நடைபெறு கின்றன. இவ்வாறு முன்னர் நடந்ததைக் கல்வெட்டுக் கள் அறிவிக்கின்றன. கோயிலில் திருப்பதிகம் விண்ணப் பஞ் செய்வார்க்கு (தேவாரம் பாடுபவர்க்கு) நிபந்தம் விடப்பட்டிருக்கிறது. திருமுறை மக்களால் மிகுதியும் கையாளப்பட்டதைக் கல்வெட்டுக்களில் காணப்படும் 'இம்மையே தருவான்', 'பொய்யாத சேவடி', 'ஒளி வளர் விளக்கு' என்ற சொற்ருெடர்களால் அறியலாம். சுவாமி யின் பெயரை மக்களுக்கு இடுவதைக் 'கோணல் மாதேவன்', 'கோணல் வடுகன்' என்று வரும் ஆட்சியால் தெரிந்து கொள்ளலாம். முடிகொண்டான் ஆற்று வட கரையில் மனதுக்கினியான் என்பான் செய்வித்த ஆதுலர் சாலைக்கு நிலம் விடப்பட்டிருக்கின்றது. திருப்புகலூர் அந்தாதி பாடிய நெற்குன்ற வாணரைப் பற்றிய குறிப்பு கல்வெட்டில் காணப்படுகிறது.

இத்திருக்கோயிலில் அபிஷேகம் ஆகிற பாலை இப்போது ஏழை மக்களுக்கு வழங்கப்படுகிறது. பசு மடம் ஒன்றும் இருக்கிறது. இறைவனுக்குப் படைக்கப்படும் திருவ முதைப் பள்ளி மாணவர்களுக்குப் பகல் உணவாக வினி யோகிக்கப்படுகிறது. முருகநாயனர் பேரால் ஒரு அழகிய திருநந்தவனம் பராமரிக்கப்பட்டு வருகிறது. திலகவதியார் சித்த வைத்திய சாலை யொன்று அண்மையில் ஏற்படுத்தப் பட்டு மருந்துகள் இலவசமாக வழங்கப்படுகின்றன. சித்த வைத்திய ஆராய்ச்சி நிலையமும் இருக்கிறது. கோயிலில் பல சிறந்த திருப்பணிகள் நடைபெற்று வருகின்றன. அண்மையில் சித்திரைச் சதயத்தில் அப்பர் திருநாள் மிகச் சிறப்பாகக்கொண்டாடப்பட்டது. பூம்புகலூர் மேவிய புண்ணியனின் பொன்னார்ந்த திருவடிகளை வாழ்த்தி வணங்குவோமாக.

---

# சிவாகமப் பரிபாலனம்

(திரு. மு. கிருஷ்ணசாமி முதலியார்)

சிவநெறிக்குத் திருக்கோயில் ஆணிவேர் போன்றது. திருக்கோயில் வழிபாடு சரியையாளருக்கு மட்டுமின்றி,

கிரியையாளர், யோகிகள், ஞானிகள் எல்லோருக்குமே அவசியம் என்று சாத்திரம் கூறுகின்றது. மக்கள் எல்லோரும் திருக்கோயில் வழிபாடு செய்யவேண்டும் என்று சமயாச்சாரிய மூர்த்திகள் அறிவுறுத்தியதோடு தாங்களும் ஆங்காங்குச் சென்று வழிபட்டனர். திருஞான சம்பந்தருக்குச் சிவபெருமான் சீர்காழிக் கோயிலில் உணர்வரிய மெய்ஞ்ஞானத்தை அருளினான். அதே மாதிரி அப்பருக்குத் திருவதிகைக் கோயிலிலும், சுந்தரமூர்த்திக்குத் திருவெண்ணெய் நல்லூர்த் திருவருட்டுறைக் கோயிலிலும், மணிவாசகப் பெருமானுக்குத்திருப் பெருந்துறையிலும் சிவஞானத்தை உணர்த்தினான். நால்வர் பெருமக்கள் பேரின்ப நிலை எய்தியதும் திருக்கோயிலில்தான். ஞான சம்பந்தர் திருநல்லூர்ப் பெருமணத்திலும், அப்பர் திருப்புகலூரிலும் சுந்தரர் திருவஞ்சைக் களத்திலும், மணிவாசகர் சிதம்பரத்திலும் பேரின்பநிலை எய்தினர். சமயகுரவர்களுக்கு இறைவன் தானே ஞானோபதேசம் செய்ததும் அவர்களுக்குப் பேரின்பநிலை அருளியதும் திருக்கோயிலில் என்றால் திருக்கோயிலின் பெருமை அளவிடற்பாலதன்று.

இவ்வாறு திருக்கோயிலில் திருமேனி கொண்டெழுந்தருளியிருந்து ஆட்பாலவர்க்கு அளவிலாவண்ணம் அருள் புரியும் இறைவனை மக்கள் பூசித்து உய்யும் பொருட்டு இறைவன்தானே சிவாகமங்களை அருளிச் செய்தான். "உயிர்கள் யாவையும் ஈன்ற எம்பிராட்டி" யாகிய காமாட்சியம்மை "இங்கு நாதநீ மொழிந்த ஆகமத்தின் இயல்பினால் உனை அருச்சனை புரியப் பொங்குகின்றது என் ஆசை" என்று "மெய்ப்பூசை எய்த ஆகம விதியெலாம் செய்தாள்" என்ற சேக்கிழார் பெருமானின் திருவாக்கினால் ஆகம விதிப்படி செய்யாத பூசை மெய்ப்பூசை யாகாது என்று உணரக் கிடக்கின்றது. சிவபூசை தவிர்த்து மற்ற புண்ணியம் எல்லாம் சிவபூசையாகிற புண்ணியத்தில் கோடியில் ஒரு பங்குக்குச் சமானமாகாது என்பது ஆகமத்தில் கூறப்பட்ட உண்மை. சிவபூசையாகிற புண்ணியத்தையும் புண்ணியம் என்று சொல்லி, மற்றப் புண்ணியங்களையும் புண்ணியம் என்று சொல்லத்தகாது என்ற காரணத்தால், பூவும் நீரும் கொண்டு செய்யும் சிவபூசையைப் புண்ணியம் என்ற சொல்லினாலேயே திருமூலர் குறிப்பித்தார்.

" புண்ணியம் செய்வார்க்குப் பூவுண்டு நீருண்டு
அண்ணல் அதுகண்டு அருள்புரியா நிற்கும்
எண்ணிலி பாவிகள் எம்மிறை ஈசனை
நண்ணறி யாமல் நழுவு கின்றாரே "

திருக்கோயில்களில் தினந்தோறும் எந்த எந்தக் காலத்தில் பூசை செய்யவேண்டும் என்று ஆகம நியதி உண்டு. அப்பர் பெருமானும் திருஞான சம்பந்த சுவாமிகளும் பூசாக்காலங்கள் அனைத்திலும் ஆண்டவனைத் தவறாமல் வழிபட்டு வந்தனர்.

" அங்க ணமர்வா ரானா ரடியிணைக்கீழ்த்
தங்கிய காதலினால் காலங்கள் தப்பாமே
பொங்குபுகழ் வாகீ சருங்கூடப் போற்றிசைத்தே
எங்கு மிடர்தீர்ப்பா ரின்புற் றுறைகின்றார் "

" நீலமா விடந்திரு மிடற்றடக்கிய நிமலரை நேரெய்துங் [டுஞ்
காலமானவை யனைத்தினிலும் பணிந்துடன் கலந்தவன் பர்களோ
சாலநாள்க ளங்குறைபவர் தையலாடமு விடக் குழை கம்பர் :
கோலமார் தரக்கும்பிடு மாசைகொண் டெழுங்குறிப்பின ரானார் "

இத்துணைப் பயனும் பெருமையும் உடையது ஆகம விதிப்படி செய்யப்படும் பூசை.

சிவபெருமான் அருளிச் செய்த சிவாகமங்கள் இருபத்தெட்டு. இந்த மூலாகமங்களுக்கு உபாகமங்கள் இருநூற்றெட்டு. இவ்வாகமங்களை அனுசரித்து வகுக்கப்பட்ட பூசைமுறைக்குப் பத்ததி என்று பெயர். பத்ததிகள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு மூலாகமத்தை முக்கியமாகக் கொண்டு அவ்வாகமத்தில் கூறப்படாத விதிகளை மற்ற ஆகமங்களையும் ஆதாரமாகக்கொண்டு கூறப்பட்டவையாகும். பத்ததிக்காரருள் முக்கியமானவர் பதினெண்மர்.

இத்துணை ஆகமங்களில் மிகச் சில ஆகமங்களே அச்சிடப்பட்டுள்ளன. ஒன்றிரண்டு பத்ததிகளும் அச்சிடப்பட்டு இருக்கின்றன. காமிகம், காரணம், சுப்ரபேதம், குமார தந்திரம் இந்த நான்கு ஆகமங்களும் மயிலை அழகப்ப முதலியாரால் பல ஆண்டுகளுக்கு முன் அச்சிடப்பட்டன. இப்பொழுதே ஒரு புத்தகமும் கிடைப்பதில்லை நூல் நிலையங்களிலும் குறிப்பிட்ட சிலரிடமும் இருக்கும் புத்தகங்கள் இப்போது காகிதம் மக்கிப்போய் விட்டதால் இன்னும்

சில ஆண்டுகளில் அறவே கெட்டுப்போய்விடும். ஓலைச் சுவடிகளில் எழுதப்பட்ட படியே இருக்கும் ஆகமங்களின் நிலைமை இன்னும் மோசம். சிவாகமங்களில் பற்றுள்ள சிலரே முக்கியமாகச் சிவாச்சாரியார்களே இந்த ஓலைச் சுவடிகளை வேண்டும்போது புதுப்பித்து எழுதிப் பாதுகாத்து வந்தனர். சிவாச்சாரியார்களின் பொருளாதார நிலைமை வரவரச் கெட்டுப்போய்விட்டதால் அவர்களுக்கு ஆகமப் பாதுகாப்பில் இருந்த ஊக்கம் மிகக் குறைந்துவிட்டது. தற்சமயம் சில ஆகமங்கள்தான் கிடைக்கும் என்றும், மற்றும் சில ஆகமங்களில் ஒவ்வொரு பாகம் கிடைக்கலாம் என்றும், விசாரித்த அளவில் தெரிகிறது. சிவாகமங்களை அச்சிட முயற்சி செய்யாமல் இன்னும் சைவ உலகம் வாளா இருக்குமானால், ஆண்டுகள் கழியக்கழிய ஒவ்வொரு சிவாகமமாய்க் கெட்டுப்போய்க் கடைசியாக ஒரு சிவாகமமும்கூட கிடைக்காமல் போய்விடும். தனிநபர்கள் சிவாகமம் சிலவற்றை எழுதிவைத்துப் பாதுகாத்து வந்தாலும் அவற்றில் பிழை மலிந்திருக்கும். இப்போதிருக்கும் பிரதிகளிலேயே பிழைகள் இருக்கும். ஆகமங்கள் கிடைக்காமல் போய்விட்டால், அல்லது கிடைக்கும் ஆகமங்களில் பிழை மலிந்திருந்தால், ஆன்மார்த்தமாகவும் பரார்த்தமாகவும் செய்யப்படும் பூசை ஆகம பூசை என்று பெயரளவில் சொல்லிக் கொள்ளலாமே தவிர "மெய்ப்பூசை" ஆகாது.

சில நாட்களுக்கு முன் சங்கராச்சாரிய சுவாமிகள் சென்னையில் பேசியபோது வேதங்களை நன்கு பயின்று ஒரு சிலராவது வேத நெறியில் நிற்காவிட்டால் இந் நாட்டிற்கேயன்றி உலகத்திற்கும் ஆபத்தாய் முடியும் என்றார். ஆனால் பாடபுத்தகத்தை வாசிக்காமல் அப்புத்தகத்திற்கு எழுதப்பட்ட விளக்கத்தை மாத்திரம் வாசிக்கும் மூடமாணவர்களைப்போன்று, ஆகமப் பாடசாலையில் வாசிக்கும் மாணவர்கள் ஆகமத்தைக் கண்ணால்கூட பார்க்காமல் நித்ய நைமித்திக பூசை முறையை மாத்திரம் கற்றுக்கொள்ளுகிறார்கள். வேதத்தைப் பொது நூலாக உலகர்க்கும், ஆகமத்தைச் சிறப்பு நூலாகச் சத்திநிபாதர்க்கும் இறைவன் அருளிச் செய்தான் என்பது சைவசித்தாந்த சாத்திரம் கண்ட உண்மை. "வேதங்கள் ஐயாஎன" அவற்றிற்கப்பாற் பட்ட சிவபெருமான் " ஆகமமாகி நின்று அண்ணிப்பான்."

என்ற மணிவாசகர் வாக்கும் இவ்வுண்மையை உணர்த்து கின்றது. ஆகமவிதிப்படி செய்யப்படும் பூசை தப்பினல் விளையக்கூடிய தீமையைச் சிவாகமப்பொருளைச் சிவனரு ளால் உணர்த்திய திருமூலர் முன்னரே அறிவுறுத்தி இருக்கின்ருர்.

“ ஆற்றரு நோய் மிக்(கு) அவனி மழையின்றிப்
போற்றரு மன்னரும் போர்வலி குன்றுவர்
கூற்று தைத்தான் திருக்கோயில்க ளானவை
சாற்றிய பூசைகள் தப்பிடிற் ருனே ”

“ தென்னுடுடைய சிவனே எந்நாட்டவர்க்கும் இறைவன்.” ஆகையால் உலக மக்களின், நன்மையைக் கருதிச் சிவா லயங்களில் செய்யப்படும் பூசை என்றென்றும் செவ்வனே நடைபெற்றுவரும் பொருட்டுக்கிடைக்கக்கூடிய சிவாகமங் களை உடனடியாகச் சேகரித்து அவற்றில் உள்ள பிழைகளை நீக்கி அச்சிடவேண்டும். அப்படி அச்சிடச் சென்னை அற நிலைய ஆணையாளர் ஏற்பாடு செய்து வருகிருர். ஆனல் இவ் வரும் பெரும்பணியில் பலரும் பங்கெடுத்துக்கொள்ள வேண்டும். “ என் கடன் பணிசெய்து கிடப்பதே ” என்ற குறிக்கோளுடைய சைவ ஆதீனத் தலைவர்கள் ஆவன செய் வார்கள் என்பதில் ஐயமில்லை. சிவநேயச் செல்வர்கள் அனைவரும் ஆங்காங்குக் கிடைக்கக்கூடிய சிவாகம ஓலைச் சுவடிகளைச் சேகரித்துதவவேண்டும்.

---

# கந்தரனுபூதி

[மா. ப. தியாகராாசன், பி. ஏ.]

கெடுவாய் மனனே கதிகேள் கரவா
திடுவாய் வடிவேலிறைதாள் நினைவாய்
சுடுவாய் நெடுவேதனை தூள் படவே
விடுவாய் விடுவாய் * வினையா வையுமே.

இப்பாடலிற்குத் தலைப்பு “ தீராப்பிணிதீர ” என்று கொடுக்கப்பட்டு, உட்கிடை மனத்திற்கோர் உபதேசங்

கொடுக்கப்பட்டிருத்தலையுங் காணலாம். பிணிக்கும் அவ்வுபதேசத்திற்கும் அமைந்துள்ள சம்பந்தத்தை உணரின், பிணி நீங்க அவ்வுபதேசம் வேண்டுமென்று நன்குணரலாம். உடற்பிணி நீங்கவும், தீராப்பிணியாகிய பிறவிப்பிணி, உயிர் மீண்டும் மீண்டும் பிறத்தலாகிய உபாதியும் நீங்க இப்பாடலில் உபதேசம் அமைந்துள்ளது.

தற்போது அன்னிய நாடுகளில் செய்துவரும், மனோ தத்துவச் சிகிச்சை முறைகளில் (Psychological cure) தீய எண்ணங்களே பிணிகளை உண்டாக்குகின்றன என்று தீர்மானித்துள்ளார்கள். அதன் வழி சிகிச்சைகளும் செய்துவருகின்றனர். "ஆரோக்கியம்; அருள்; ஆனந்தம்" முதலிய நல்ல சொற்களின் ஈடுபட்டால் நமக்கு அவைகளின் தன்மை யேற்படுகின்றன வென்றும், "பிணி," "அல்லல்" "பகை" முதலிய தீயசொற்களினீடுபாட்டினல் அவை சம்பந்தமான சூழல்கள் நமக்கு ஏற்படுகின்றன வென்றும் அனுபவத்தால் விளக்கிக் காட்டியுள்ளார்கள். எனவே மனதிற்குக் கூறும் உபதேசமாவது, "கரவாதிடுவாய்" "வடிவேலிறைதாள் நினைவாய்" என்பனவாம்; "வடிவேலிறைதாள் நினைதலினல்" தீய எண்ணங்கள் மனத்தைவிட்டகலும். முருகனுடைய இளமை வனப்பும், கூர்வேல் வல்லமையும், ஆடும்பரியினழகும் ஆகிய தூய எண்ணங்கள் வடிவேலிறைதாள் நினைந்து போற்றுதலினல் எழும், தீய எண்ணங்களை அகற்ற நாம் முயலவேண்டுவதில்லை. ஆற்றல், அழகு அன்பு, ஆகிய நல்ல குணங்களின் தொகுப்பாயமைந்த இறையாட்சியை மனம் நினைந்துருகுமானல் வேற்றெண்ணங்களுக்கும் தன்னைப் பற்றிப் பாச எண்ணங்களுக்குமிடமிராது.

மற்றும் "கரவாதிடுவாய்" என்று ஒரு பெரிய உபதேசத்தை யருளியிருக்கிறார்கள். நம்மிடம் இடும் பழக்கத்தை உண்டாக்கவே இறைவன் கபாலமேந்திப் பிட்சாடனராகக் காட்சி அளிக்கின்றான். "பஞ்சத்திலும் சென்று பிட்சை கேளுங்கள்" என்று புத்தபகவான் கூறுவார்களாம். ஏன் இட்டுண்ணும் நற்பழக்கம் இல்லாக் காரணத்தினலே தான் பஞ்சம் ஏற்படுகிறது என்ற உண்மையை உணர்த்தவே அவ்வாறு பெரியவர்கள் செய்து காட்டினர்

கள். கரவாது இடுவாய் என்றதனால் தனக்கென ஒரு பகுதி வைத்துக்கொள்ளுதல் இடுதலுக்கு ஒரு வரம்பு தேடிக்கொள்ளுதல் போல ஆம். அவ்வரம்பு ஏன் ஏற்படுத்திக்கொள்கிறோம்? இறைவனால் நமக்குக் கொடுக்கப்பட்ட பொருளென் றெண்ணாமல் நம்மால் மேற்கொண்டு சேமிக்க முடியாது என்ற தன்முனைப்பாலும் பயத்தாலும் இடுதலுக்கு ஓர் வரம்பமைத்துக் கொள்கிறோம். "ஏரி நிறைந் தனைய செல்வனென" நம் வழிபடு கடவுளை எண்ணுவோமாயின் அவரிடம் எவ்வளவும் கேட்டுப் பெறலாம் என்ற உறுதி இருக்குமாயின் தானம் இடுவதற்கு மேலும் மேலும் ஊக்கமுண்டாகும். பூமியில் ஒரு சிறிதேனும் விளை நெல் விதைத்தால் தான் நமக்கு விளைவு ஏற்படும். விதைக்காமல் பயிர் வளர்த்து சாகுபடி செய்வது இயலாத காரியமாகும். இது இயற்கை விதி: இறைவன் நியதியுமாகும். இராமலிங்க சுவாமிகள் பாடும் பின்வரும் பாடலில் இக்கருத்து அமைந்து கிடப்பதை விளக்கமாகக் காணலாம்.

"ஈயென்று நானொருவ ரிடம்நின்று கேளாத இயல்பும்
என்னிட மொருவரிட என்றபோது அவர்க்கில்லை யென்று
சொல்லாம லிடுகின்ற திறமும்மிறையாம் உலகில்
சீயென்று பேயென்று நாயென்று பிறர்தமைத்
தீங்கு சொல்லாத தெளிவும் வாய்மையும்
தூய்மையும் தந்துநின் திருவடிக் காளாக்குவாய்"

இப்பாடலின் முதலிரண்டடிகள் முரண்படுதல் போல் காணப்படுகிறது. "ஈயென்று நான் ஒருவரிடம் நின்று கேளாத இயல்பால் இறைவன் ஒருவனே எல்லோருக்குமிடுபவன் என உணர்ந்து அவனையன்றி வேறொருவரையும் சென்று கேளாதிருத்தல் வேண்டும் என்ற பண்பாட்டை வேண்டுதலேயாம். அப்படிப் பெற இயலாது தம்மை வந்து கேட்பவர்களுக்கு இல்லை யென்று சொல்லாமலிட வேண்டுமென்பது பின் வரியால் உணர்த்தப்படுகிறது. கரந்து பேசுதலும் வாய்மையும் தூய்மையும் இன்மையை உணர்த்தும். எனவே எண்ணங்களையும் ஒளிக்காமல் பேசிவிடவேண்டும். உள்ளொன்று வைத்துப் புறம் பொன்று பேசுதல் எண்ணங்களைக் கரந்து பேசுதலாகும்.

காவாதிடுவாய் என்னும் உபதேசம் வாய்மையோடிருத்தல் வேண்டுமென்பதையும் உணர்த்துகிறது.

முருகனை தோழமை கொண்டு, பெறுதல் யாவும் அவனிடம் கேட்டுப் பெறுதல் வேண்டும். அவனால் பெறப் படுதலை அனைவர்க்கும் பயன்படுத்தல் வேண்டும். செய்வன யாவும் அவன் ஊக்குவிக்கச் செய்யும் காரியங்களென உணர்ந்தால் நம் செய்கைகளைக் கரந்து பேசுதல் வேண்டுவ தில்லை. அப்படி எண்ணும் தன்மையே வாய்மையையும் மனத்தூய்மையையும் உண்டாக்க வல்லது. பாச எண்ணங் கள் மறைக்கப்பட்டும் மனத்தில் பொதிந்து கிடக்குமாயின் அவையே சஞ்சித கர்மங்களுக்கு வித்துப்போல்வனவாம். சஞ்சித கர்மமாவது, மூட்டை கட்டி வைத்திருக்கும் வினைகள், அனுபவத்திற்கு வாராவினைகள். வெளிப்படாது மறைந்து கிடக்கும் வினைகள். அவை "ஞானத்தழல் சுட்டு வெண்ணீறாகும்." அவை அவ்விதம் தூள்பட்டால்தான் பிறவிப்பிணி நீங்கும். பிறவிப்பிணி தீராப்பிணியாக உயி ரைப்பற்றி நிற்கும். வடிவேல் ஞானத்தைக் குறிக்கும். வடிவேலிறைதாள் நினைதலினால் அவன் குருவாய் வந்து உபதேசிக்க ஞானமுண்டாம். ஞானச்சுடரே சஞ்சித வினைகளாகிய நெடுவேதனைகளைத் தூள்படச் செய்வது. இப் போது நினைக்கும் எண்ணங்களினால் பின்னர் விளையும் வினைகளைத் தடுக்க உபாயம் "விடுவாய் விடுவாய் வினையாவை யுமே" என்று உபதேசிக்கின்றார்கள். புதிய எண்ணங் களினால் சேமிக்கப்படும் வினைகள் ஆகாமிய வினைகளென்று கூறப்படும். அவை "கிட்டாமல் விட்டுப்போவதற்கு" உபாயம், தன் வினை அறுதலேயாகும். வினையை விடுதலா வது தாம் செய்கின்றோம் என்ற தன் முனைப்பை விடுதலே யாகும். "யான் செய்தனன் பிறர் செய்தனர்" என்று எண்ணாமல் உயிர் "சுதந்திரமிலி" என்பதை உணர்ந்து உலகமே சிவபெருமானின் பஞ்சகிருத்திய தாண்டவத்தால் இயக்கப்படுகிறது. உயிர்களும் அவ்விதமே என ஊன்றி உணர்ந்து வாழ்வோமாயின் ஆகாமிய கன்மம் சேர்வதற் கிடமின்றி, பிராரத்வ வினை இப்பிறவியில் செய்து முடிக்க வேண்டிய வினைகளற்றவுடன் உயிர் தீராப் பிறவிப் பிணி நீங்கி, இறைவன் திருவடி அடையும்.




மூலமந்திரம் — ஓம் யிங் யிங் அங்
நைவேத்தியம்— அன்னம், அறுசுவை
பதார்தத்துடன் பால் பழம் சர்க்கரை

குறிப்பு :—பாட்டில் * இக்குறியிட்டுள்ள இடத்தில் அதாவது விடுவாய் என்ற தொடரின் பின் பிணியாளரின் பெயரைச் சேர்த்துப் படிக்கவும். பிணியாளரும் இப் பாடலை மூலமந்திரத்துடன் மனனம் செய்து வருதலால் விரைவில் குணமுண்டாம்.



# அப்பர் அருள் மொழி

(திருமதி. வித்வான் - சிவ. மீனுட்சிசுந்தரசிவை அவர்கள்)

“ எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்பதறிவு ”

என்னும் வாய்மொழிக் கிணங்கத் திருநாவுக்கரசு நாயனர், தம் தாயும், தந்தையும் தொன்று தொட்டுக் கைக்கொண்டு வந்த நெறி என்றதற்காக அதனைக் கைக் கொள்ளாமலும், தம் பொருட்டு உயிர் தாங்கி இருந்த தமக்கையார் கைக்-

கொண்டு வருகிற நெறி என்பதற்காக ஆராயாமல், அதனைக் கைக்கொள்ளாமலும், தம் அறிவினால் சமய உண்மைகளை ஆராயத் தொடங்கினர்.

அவர் காலத்தில் சமண சமயம் போலச் சைவ சமய உண்மைகளை வெளிப்படச் சொல்லும் பெரியவர்களோ, மடங்களோ, நூல்களோ சிறந்திருந்தனவாகக் கொள்ளுவதற்கில்லை. பெயரளவில் வழிபாடும், நம்பிக்கையும் மட்டுந்தான் மக்களிடையே நிலைத்திருந்தன. அதனால் அவை அவர் ஆராய்ச்சிக்குத் துணையாகவில்லை. சமண சமயத்தில் மடங்களும், நூல்களும், குருமாரும் பெருகி இருந்தன. திருநாவுக்கரசர் அவற்றை ஆராய்ந்து கண்ட உண்மைகளைப் பிறருக்கு எடுத்துச் சொல்லி அச் சமயத்தையும் வளர்ப்பாராயினர். அதனால் அச் சமயத்தாரால் பாராட்டப்பட்டுத் தருமசேனர் என்னும் பட்டமும் சூட்டப்பெற்றனர்.

அச்சமயத்தைவிடச் சைவ சமயம் சிறந்தது என்று நூல் வாயிலாக எடுத்துச் சொல்பவர் எவரும் இல்லாமையினால் திலகவதி அம்மையார் ஆண்டவனிடத்தில் முறையிட்டனர். ஆண்டவன் புத்தரை வெல்வதற்குத் தில்லைவாழ்ந்தணர் கனவில் மாணிக்கவாசகரைக் காட்டியதுபோல், சமணரை வெல்வதற்குக் காட்டத்தக்கார் எவரும் இல்லாமையினால் சூலைநோயைத் திருநாவுக்கரசர்பால் ஏவி அருளினர். அச்சூலை நோய் சமணர்களுடைய பிராகிருத மந்திரத்தால் நீக்கப் பெறாமல் திருவருளால் தேவாரமாகிய தமிழ் மந்திரத்தால் நீக்கப் பெற்றது. இப்படி நீக்கப் பெற்ற நிலையில் திருநாவுக்கரசு நாயனார் முன்னே கொண்ட சமணத்திலேயே இருந்து விடாமல், மீண்டும் சைவ சமயம் உயர்வு என்று சார்ந்தனர். இதனால் முற்கூறிய திருக்குறள் பொருந்தும்.

இவர் எண்பத்தோராண்டு இவ்வுலகில் வாழ்ந்தார். இவர் உலகத்தின் உண்மை உணர்வுகளைக் கண்டு துன்பமுற்று உய்ந்தவர். அதனைத் தேவாரத்தில் நாம் காணலாம். இவர் கூறிய அருள் மொழிகள் அனுபவம் வாய்ந்தவை. ஆகலின் இவர் சொல்லில் நாம் மிகவும் ஈடுபட வேண்டும். "சொல்லுக்குறுதி அப்பர்எனச் சொல்லு" என்பது முதியோர் வாக்கு.

இவர் தேவாரத்தில் சித்தாந்தத்தின் உண்மைகள் பொதிந்து உள்ளன. இவருடைய திருத்தாண்டகம் தனிச் சிறப்புடையது. இவர் தேவாரத்தில் திருக்குறுந்தொகை 100 பதிகங்களாகும். அவை நேர் அசையால் தொடங்கின் 11 எழுத்தையும், நிரை அசையால் தொடங்கின் 12 எழுத்தையும் உடையனவாகும். சுருங்கிய எழுத்துள்ள பாடலாதலின் குறுந்தொகை என ஆயிற்று.

'மாசில் வீணை' என்று தொடங்கும் திருக் குறுந் தொகைப் பதிகத்தில் உண்மை நெறி விளக்கத்தின் (சாத்திர நூல்) கருத்துக்களை காணலாம்.

"மாசில் வீணையும் மாலை மதியமும்
வீசு தென்றலும் வீங்கிள வேனிலும்
மூசு வண்டறை பொய்கையும் போன்றதே
ஈசன் எந்தை இணையடி நீழலே"

ஆண்டவனுடைய திருவடி யின்பம் காண்டற்கும், கேட்டற்கும், கருதற்கும், சொல்லுதற்கும் அப்பாற்பட்ட பெருமை உடையது. என்றும் நிலைத்திருப்பது. ஒப்பில்லாதது. நுகர்வார் மட்டும் உணர்ந்து இன்புறும் பெருமை வாய்ந்தது. அத்தகைய இன்பினை அடையும் நெறியானே அடைந்து பெறுவார்க்கு அவர் அறிந்த உலகியல் இன்பங்களுள் சிறந்தனவற்றை எடுத்துக் கூறி, "வானோர்க்கு உயர்ந்த உலகம் புகும்" என்றாற் போல, மிக்க பேரின்பம் என்பதற்கு ஒருபுடையான் விளங்கும் ஒப்பு இத் திருப் பதிகம்.

குற்ற மற்ற வீணையினின்றும் உண்டாகும் இனிய ஓசையால் வரும் இன்பமும், மாலைக்காலத்தில் தோன்றும் மதியத்தைக் காணுந் தன்மையால் வரும் இன்பமும், தென்றற்காற்று மேலே படுவதால் உண்டாகும் இன்பமும், இளவேனிற் காலத்தில் உண்டாகும் மண முதலிய இன்பங்களும், வண்டுகள் மொய்த்து ஒலிக்கும் பொய்கையினிடத்து உண்டாகும் இன்பமும் போன்றதாகக் காணப்படும், என்னை ஆட்கொள்ளும் அருட் செல்வனும், அவன் திருவடி இன்பத்தைத் துய்க்கும் உரிமைப் பாட்டைத் தந்தருளிய எந்தையுமாகிய சிவபெருமானின் இரண்டு திருவடி நீழலால் உண்டாகும் இன்பம்.

இதன்கண் வீணை ஓசையால் செவிக்கும், மதியத்தால் கண்ணிற்கும், தென்றலால் மெய்க்கும், வேனிலால் மூக்கிற்கும், பொய்கையால் நாக்கிற்கும் உண்டாகும் சுவையின்பங்களைக் குறிப்பால் உணர்த்தி,

"கண்டு கேட்டு உண்டு உயிர்த்து, உற்றறியும் ஐம்புலனும்
ஒண்டொடி கண்ணே உள"

என்பது போன்ற நிலைத்த ஐம்புலன் நுகர் இன்பம் ஆண்டவன் திருவடி நீழற்கண் உளதென்பது ஓதியவாறுயிற்று. இது ஒருபுடையாகத் தத்துவ ரூபத்தோடு ஒத்துநிற்கும். தத்துவரூபமென்பது உலகையும், உலகியற்பொருளையும் ஆக்கப்பாடுடைய காரியப்பொருள்கள் என்ற கருத்தின்றிக் காண்பது. இது சிவஞான போதத்து 9-சூத்திரத்துக் காணப்படும் திரியக் காண்டல், இரட்டுறக் காண்டல், தெளியக் காண்டல் என்ற மூன்றனுள் திரியக்காண்டலாகும். திரியக்காண்டலென்பது ஒன்றை மற்றொன்ருகக் கருதுவது. காரணகாரியத் தொடர்புடைய உலகை அத்தொடர்பின்றி என்றும் இப்படியே உள்ளதென்பது திரியக் காண்டலாகும்.

"மண்முதற் சிவமதீறும் வடிவு காண்பதுவே ரூபம்"

உயிர்கட்கு ஞானத்தை நல்கும் பொருட்டு உலகத்தை நடத்துவது அருட்சத்தி (நடப்பாற்றல்.) ஆண்டவனோடு கூட்டுவது வனப்பாற்றல். அறியாமையும், பிணிப்பும் உடைய உலகு, உடல்களை உயிர்க்கு இணைத்து அவற்றால் அவ்வுயிர்கள் ஆண்டவன் அடியிணையைச் சார்தற்குரிய திருவடி உணர்வைப் பெறுதற்குப் பெருவழி செய்வதே ஆண்டவன் திருநோக்கம். ஆயினும் முற்ற முடிய முதற்கண்ணே, செய்வதைத் தாங்கும் அறிவும், ஆற்றலும் உயிர்க்குவளராமையால், சின்னாட்கள் உலகியலாக நடத்திக் கல்வியையும், பின் வீட்டியலாக நடத்தி ஞானத்தையும், கொடுப்பது "நமச்சிவாய" என்னும் நற்றமிழ் மறையாம்.

அந்த நமச்சி வாயவே உலகு, உடல்களையும் உயிர்களையும் நடத்துகின்றதென்னும் உண்மை உணர்ந்தார்க்கு, அதற்குமேல் அறியவேண்டிய பொருள் வேறொன்றும் இல்லை என்பது புலனுகும். அம்முறையில் நானறிகின்ற மேலான மெய்யுணர்வும் நமச்சிவாயவே யாகும். இவற்

ருல் என்னுடைய நாவானது இடைவிடாது பழக்கிய பழக்கத்தால் நான் பின்பு தூண்டாமலே அது தானாகவே விருப்பத்தோடு புகழ்ந்து கூறிக்கொண்டிருப்பதுமாகும். அம்மட்டும் அன்று. அதுவே சீலம், நோன்பு, செறிவு, அறிவு (சரியை, கிரியை, யோகம், ஞானம்) என்கின்ற நான்கினையும் உறுப்பாகக்கொண்டு திகழும் நன்னெறியாகிய சிவநெறியைக் காட்டுவதுமாகும். எனவே உலகை நடத்துவதும், உடலை உயிர்க்கு இணைத்து நடத்துவதும், நிலைத்த தன் திருவடியினை வந்தடைதற்கு என்னும் உண்மையறிவு உண்டாகும். இதுவே உலகை உண்மையறிந்த காட்சியாகும். இது பதிகத்தின் இரண்டாவது பாட்டாகிய "நமச்சிவாயவே ஞானமுங் கல்வியும்" என்று தொடங்கும் பாட்டின் பொருளாகும். "மண் முதல் சிவம தீரும் மலம் சடமென்றல் காட்சி" என்பதின் கருத்தை இதில் காணலாம்.

"ஆளானார்க் காளானாரை யடைந் துய்யார்
மீளா ஆட்செய்து மெய்ம்மையுள் நிற்கிலார்
தோளாத சுரையோ தொழும்பர் செவி
வாளா மாய்ந்து மண்ணாகிக் கழிவரே"

சிவபெருமானின் திருவடியிணையினை அடைவதற்குரிய வழி, அவனது திருவடியார்க்கு அடியராய்த் தொண்டு பூண்டு ஒழுகும் மெய்யடியார்களைச் சார்ந்து, அவர்கள் செல்லும் வழியிலே சென்று ஒழுகி, நிலைத்து நிற்பது. அந்த முறையினைச் சிலர் செய்யார். அவ்வழியாகச் சென்று ஆண்டவனுக்கு மீளா அடிமையாய் மெய்ப்பொருளாகிய அவன் திருவடிக் கண்ணும் உறைத்து நிற்கமாட்டார்கள். நின்றதற்கு ஒப்பு அப்பரே. தாமாக நில்லாத அவர்கட்கிரங்கி மெய்யடியார்கள், அவர்கள் நல்வழிப்பட்டு உய்யவேண்டியது தங்கள் கடமை ; தாம்பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம் என்பதே சிவத்தொண்டு ; அதுவே இறைவன் திருவாணை என்று உளங்கொண்டு அவர்களுக்கு அவ்வுண்மைகளை உணர்த்தப் புகுவர். அவர்கள் அதனைச் செவி கொடுத்தும் கேளார்.

அங்ஙனம் கேளாமையால் துளைக்கப்பட்டுப் பயன்பெற வேண்டிய சுரையானது துளைக்கப்படாதபடி பயன் பெறுமைபோல, இவர்கள் செவியும் மெய்யுணர்வு கேட்டுப்

பயன்பெறுவதற்கு இடந்தராது, பொய்யுணர்வே கேட்டுப் பொழுது போக்குவதால் தோட்கப்படாத செவியோ? என்று எண்ணுதற்கு இடனுகிறது.

"கேட்பினுங் கேளாத் தகையவே கேள்வியால்
தோட்கப் படாத செவி"

தொழும்பர் செவியென உயர்த்துக் கூறியது குறிப்பான் அவர்களை இழித்ததாகும். அல்லதூஉம்,

"சேவித்தும் சென்றிரந்தும், தெண்ணீர்க் கடல்கடந்தும்
பாவித்தும் பாராண்டும் பாட்டிசைத்தும்—போவிப்போம்
பாழின் உடம்பை வயிற்றின் கொடுமையால்
நாழியரிசிக்கே நாம்"

என்றவாறு வயிற்றிற்கே அடிமையாய் மீட்டும் பிறக்கும் தொழும்பினைச் செய்வார் என்று கூறினும் அமையும்.

பிறந்தார் அனைவரும் வீடுபேறு எய்தற்கு இறந்தே ஆதல் வேண்டும். இறவாமல் இங்கு இருப்பார் எவருமிலர். ஆனல் அவ்விறப்பு அடையவேண்டிய சிறப்பின் பொருட்டாயில் அனைவராலும் வரவேற்கத் தக்க உயர்வுடையதாகும். அடையவேண்டாத பிறப்பின் பொருட்டாயின் வெறுக்கத்தக்க இழிவுடையதாகும். இங்கு, இவ்வயிற்றுத் தொழும்பர் நல்லது கேளாத, செவிட்டுத் தொழும்பர் வீணாகப் பிறப்பதற்காளாய் மாய்ந்து மண்ணொடு மண்ணாய் அழிவாரென்பதாம். இவ்வுண்மை அறிவுதான் சுத்தத் தெளிவு.

இவ்வுலக வாழ்க்கை இன்பமேயாயினும், துன்பமேயாயினும் இரண்டும் விரைவினும், துன்ப வாழ்க்கையேயாகும்; எங்ஙனமெனில், உயர்ந்தபொருளைச் சுமந்தாலும், உயர்வல்லாத பொருளைச் சுமந்தாலும சுமப்பவருக்கு இரண்டும் சுமையே. அச்சுமை நீங்கினலன்றி அவருக்கு இன்பம் வருவதற்கில்லை. அதுபோல உடம்போடு கூடிய உயிர், அவ்வுடம்போடு கூடி நிலையாத இன்பத்தையும் துன்பத்தையும் அடைந்துகொண்டுவந்தாலும், நிலைத்த இன்பம் போன்று அவ்வாழ்வு இன்பம் தருவதற்கில்லை.

" நடலை வாழ்வு கொண்டென் செய்தீர் நாணிலீர்
சுடலை சேர்வது சொற்பிர மாணமே

கடலின் நஞ்சமு துண்டவர் கைவிட்டால்
உடலினார் கிடக் தூர்முனி பண்டமே ''

இத்தனைக் காலமும் உலகியல் துன்ப வாழ்வைப் பெற்றுக் காலத்தை வீணாய்க் கழித்ததன்றிப் பயனுடைய என்ன காரியத்தைச் செய்தீர்கள். கழிந்துபோனதற்கிரங்கி நாண முறாமல், உடல் கழிந்து விடுமோ என்று வருந்துகின்ற நாணமில்லாதவர்களே! இவ்வுடல் உயிர் நீங்கி, உயர்வு தணிவு கருதாது எல்லார்க்கும் ஒரு நிலையாகக் காணப்படும் சுடலையைப்போய் அடைவது உரையளவே யன்று காட்சி யளவே யாகும்.

எல்லாரும் உய்யும் பொருட்டு நீண்டு வாழவேண்டும் என்னுங் கருத்தால் மால் உள்ளிட்ட தேவர்கள் சிவனை மறந்து அமிழ்தெடுக்கக் கடைந்த காலத்து அம் மறப்பின் திமையால் முன்றோன்றின நஞ்சினைக் கண்டு அஞ்சி, சிவ பெருமானிடத்து வந்து முறையிட்டு, அடைக்கலம் புகுந் தனர். அவர், மறந்த அவர்களையும் காத்தற்பொருட்டு அந்நஞ்சினை உண்டு கண்டத்தடக்கினர். அதனால் நஞ்சமு துண்டவர் என்னும் திருப்பெயர் பெற்றனர். சிவனை மறப்பதென்பது சிவபெருமானை முழுமுதல்வனென்பதும், அவன் திருவாணை வழியே எல்லாம் இயங்குகின்றன என் பதும் நினைவுகொள்ளாமல், தம்மாலும் சில ஆவன உண் டென்று, அதன்பொருட்டு மகிழ்தல். வேறொன்று சிவ பெருமான் பேரொடுக்கப் பெருமான் என்னும் உண் மையை மறத்தலும் ஆகும்.

தங்கள் உடம்பிற்கு இறுதி உறுதியாக வரும் என்று எண்ணுமையும் மறத்தலாகும். எண்ணியிருப்பரேல் சாவா திருக்கவேண்டுமென்று தவருகக் கருதி அமுது கடைந் தெடுக்க முயன்றிரார். (தொடரும்)

---

## " திருவாசகமணி—சிவபக்தமணி "

14–5–59 குருவாரத்தன்று இரவு 7 மணிக்குத் திருச்சி தில்லை நகரில் நிகழ்ந்த சிறப்புக்கூட்டம் ஒன்றில் திருவாசகமணி-கே. எம் பாலசுப்பிரமணியம், பி.ஏ., பி எல். அவர்கள், " **சிருங்கேரி மடமும்—சிவவிஷ்ணு மதமும்** " என்னும் பொருள் பற்றிச் சிறந்ததோர் சொற்பொழிவாற்றினர். சிருங்கேரி சாரதா பீடத்தின் சங்கராச்சாரிய சுவாமிகள் தலைமையில் அக்கூட்டம் நடந்தது.

தமது முடிவுரையில் ஸ்ரீலஸ்ரீ சிருங்கேரி சுவாமிகள் திருவாசகமணியின் வாக்குவளம், சிலேடைச் சிறப்பு, எதுகை மோனை எக்களிப்பு, ஆராய்ச்சித்திறன், பன்மொழிப்பற்று, பரந்த நோக்கம், பக்தியின் உயர்வு முதலியவற்றை மிகமிகப் பாராட்டியதோடு இம்மாதிரிப் பேச்சைத்தாம் இதுவரை எங்குங் கேட்டு மகிழ்ந்ததில்லை என்று கூறினர்.

ஸ்ரீலஸ்ரீ சுவாமிகள் தமது பாராட்டுதற் சின்னமாகத் திருவாசகமணி யவர்கட்குச் " **சிவபக்தமணி** " என்றதொரு சிறப்புப் பட்டம் வழங்கிப் பொன்னுடை போர்த்திக் கௌரவித்தார்.

**திருவாசகம்** பாலசுப்பிரமணியம் என்பது உயர்திரு. திரு. வி. க. அவர்கள் முதன்முதல் ஈந்தபட்டம். அதன்பின் 1950 ஸ்ரீலஸ்ரீ தருமபுரம் மகாசந்நிதானத்தால் '**திருவாசகமணி**' என்ற பட்டம் அளிக்கப்பெற்றது. 1957-ல் மதுரைத் திருஞானசம்பந்த மடத்தலைவரால் " **செஞ்சொற் பாவலர்** " என்ற பட்டமும் அளிக்கப் பெற்றுள்ளது.

---

குன்றத்தூரில் சேக்கிழார் கும்பாபிடேக விழா: 10–6–59ல் மிகவும் சிறப்புற நடைபெற்றது. திருவாளர்கள் - N. சங்கரனுர், M.A., L.T., திருமுருக - கிருபானந்தவாரியார், திருப்புகழ்மணி - T. M. கிருஷ்ணசாமி ஐயர், வித்துவான் - ச. கணபதி முதலியார், திருமதி. மா. சண்பகவல்லி அம்மையார், க. வச்சிரவேல் முதலியார், B.A.,L.T., திருமாமறை சிவம், பூ. சமரபுரி முதலியார், சி.த. சேக்கிழார், M.A.,B.L., வைத்தியலிங்கஞ்செட்டியார், K. பாலசுப்பிரமணிய ஐயர், B.A., B.L., M.L.C., ச. சிவகுமாரன், M. A., இரத்தின சண்முகம், பு. பா. ரத்தினசபாபதி நாயகர், ச. சச்சிதானந்தம் பிள்ளை, B A., L.T., வித்துவான் - பாலூர் - கண்ணப்ப முதலியார், B. O. L., சே. த. இராமலிங்கம் பிள்ளை, B A., L.T. ஆகிய பேரறிஞர்கள் பலர் கலந்து கொண்டு சொற்பொழிவாற்றினர். தேவகோட்டைத் திரு. ஓ. ரா. மெ. சுப. சேவு. மெய்யப்பச் செட்டியார் அவர்கள் சிவபூசகர் விழாவினை நடத்தி வைத்தார்கள். விழா சிறப்புற நிகழச் செயலாளர் திரு. மறை. திருநாவுக்கரசு அவர்கள் பெருமுயற்சி எடுத்துக்கொண்டார்கள்.

சமயப் பிரசார வழிபாட்டுக் கூட்ட விழா: சென்னை த்தொன்மை யாதீன சமயப் பிரசார நிலையத்தின் சார்பில், 7–6–59 ஞாயிறு மாலை, தொண்டைநாட்டின் பாடல் பெற்ற தலங்களுள் ஒன்ருகிய திருவேற்காட்டில் சிறப்புற நடைபெற்றது. திருவாளர்கள் ந. சங்கரனுர், M.A., L.T., ஆவுடைநாயகம் பிள்ளை, கடிகாசலம் பிள்ளை, P. A. பாலசுப்பிரமணியம், M.A., வே. நடராஜன் M.A., ச. சிவகுமாரன் M.A., புலவர் - முருகவேள் M. O. L. ஆகிய பலர் கலந்து கொண்டனர். இராயப்பேட்டைப் பாலசுப்பிரமணிய பக்தஜன சபையின் சார்பில் தாய்மார்கள் பலர் வந்து கலந்து கொண்டமை குறிப்பிடத்தக்கது. திருமயிலைக் கபாலிச்சுரர் தேவஸ்தான தருமகருத்தர் திரு. ஐயாசுப்பிரமணிய முதலியார் அவர்கள் அனைவரையும் வரவேற்றுச் சிறந்த சிற்றுண்டி வசதிகள் முதலியன செய்துகொடுத்தார்கள். ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகள் வழிபாடும் சொற்பொழிவுகளும் நன்கினிது நிகழ முன்னின்று நடத்தியருளினுர்கள். அடுத்த மாதம் 5–7–59 ஞாயிறன்று அச்சிறுபாக்கத்தில் வழிபாடு நிகழும். அன்பர்கள் அனைவரும் வந்து கலந்துகொள்ளலாம்.

திரிசிரபுரச் சைவ சித்தாந்த சபை : 3-5-59 அன்று 'அப்பரின் ஒப்பில் பணி' பற்றித் திருமுறைச் செல்வர், பண்டித வித்வான் திரு. இராமகோவிந்தசாமி பிள்ளை அவர்களும், 24-5-59 நிகழ்ந்த "திருஞானசம்பந்தர்" பற்றிச் சைவப் பெருநாவலர் திரு. அ. நடேச முதலியார் அவர்களும் சொற்பொழிவாற்றினர்.

திருநாவுக்கரசு நாயனார் சைவ சித்தாந்தக் கழகம், திருத்துறையூர் : 15-5-59 முதல் 24-5-59 வரை திருஞானசம்பந்தர் தேவாரப்பதிகங்கள் திருவதிகைவீரட்டானத்தில் கூத்தப்பெருமான் முன்பு முழுவதும் ஓதி முடிக்கப் பெற்றன. சமாஜப்பேரன்பர்கள் திரு. ரா. சண்முகசுந்தரம் செட்டியார் அவர்களும், திரு. கி. கு. ஆறுமுக நாயனார் அவர்களும் பிறரும் இதனை நடத்தி முடித்த சிறப்பு, பெரிதும் போற்றுதற்குரியது. இத்தகைய "படனவேள்விகள்" ஆங்காங்கும் நிகழ்தல் பெரு நலம் பயக்கும்

திருமுண்டீச்சரம் : "அப்பர் விழா" சுவாமி விமலானந்தா அவர்கள் தலைமையில் நடந்தது. திரு. நா. சரவண மாணிக்கம், திருமதி. காஞ்சனமாலை அம்மையார், லெ. கரு. லெ. ராம. கணேசன் செட்டியார் ஆகிய பெருமக்கள் கலந்துகொண்டனர்.

சமாஜச் செய்திகள் : 24-5-59 அன்று மயிலைக் கபாலீச்சுரர் கோயிலில் நிகழ்ந்த "**சம்பந்தர் விழா**"வில் திரு. C. N. சிங்காரவேல் முதலியார் M. A. அவர்கள் தலைமையில் திரு. ஆறுமுக முதலியார் அவர்கள் சொற்பொழிவாற்றினார்கள். 14-6-59 அன்று இராயப்பேட்டைப் பால சுப்பிரமணிய பக்தஜன சபையில் "**சேக்கிழார் விழா**"வும், சமாஜச் செயற்குழுவினர் கூட்டமும் நடைபெறும். அன்பர்கள் அனைவரும் வருக.

Printed at the Sadhu Press, 15, Madhava Perumal Koil Street, Mylapore by T. Mangayarkarasi and V. K. Punithavathi, Edited by Pulavar Murugavel, M.O.L. & Published by S. Satchidanandam Pillai, B.A., L.T. for the Saiva Siddhanta Maha Samajam, 14, Warren Road, Mylapore, Madras-4.